

# சர்ச்சைகளின் நாயகி

'தாழ்த்தப்பட்ட மக்களின் எதிரிதான் காந்திஜி. அவர் குறிப்பிட்ட ஹரிஜன் என்னும் வார்த்தைகூட தாழ்த்தப்பட்ட மக்களைக் கேவலப்படுத்துகிற ஒரு சொல்தான்!' - இப்படிச் சொல்லி தேசத்தையே ஓர் உலுக்கு உலுக்கியவர் உத்தரப் பிரதேசத்தின் இன்றைய முதல்வராகப் பதவியேற்றிருக்கும் மாயாவதி!

காந்திஜியை இப்படி விமர்சித்ததற்காக மாயாவதியை அந்தமான் சிறையில் தள்ள வேண்டும் என்று கொதித்தெழுந்தார் சுப்பிரமணிய சுவாமி. தடாவின்கீழ் கைது செய்ய வேண்டும் என்று அறிக்கை விட்டார் ஜெகதீஷ் டைட்லர். அப்போது இவர் கைது செய்யப்படவில்லை' யென்றாலும் 1992-ல் தேசிய பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் கைது செய்து, அலகாபாதிலுள்ள நைனி சிறையில் வைக்கப்பட்டிருந்தார்.

மாயாவதியின் பகுஜன் சமாஜ் கட்சி, முலாயம்சிங் யாதவின் சமாஜ்வாடி ஜனதா கட்சிக்கு ஆதரவு தந்து, முலாயம் சிங் முதல்வராக இருந்தபோது, மாயாவதிதான் உண்மையில் அதிகாரம் செலுத்திக் கொண்டிருந்தார்.

'அரசு அதிகாரிகளைத் தம்மோடு சோபாவில் உட்கார வைத்துக் கொண்டு, அமைச்சர்களையும் எம்.எல்.ஏக்களையும் பியூன்களைப் போல் காலடியின்கீழ் - தரையில் உட்கார வைத்துக் கொண்டுதான் பேசிக் கொண்டிருப்பார்' என்று இவரது கட்சிக்காரர்களே விமர்சனம் செய்திருக்கிறார்கள்.

யார் இந்த மாயாவதி?

தில்லியிலிருக்கும் சாதாரண, தாழ்த்தப்பட்ட குடும்பத்தில் பிறந்தவர் மாயாவதி. தந்தை தபால்-தந்தி இலாகா ஊழியர். மாயாவதி தமது பட்டப்படிப்பை முடித்துவிட்டு தில்லியிலுள்ள ஒரு பள்ளியில் ஆசிரியையாக வேலை பார்த்து வந்தார்.

அப்போது ஜனதா அரசு நடத்திவந்த 'ஜாதி ஒழிப்பு சம்மேளனத்'தின் வீரியமிக்க பேச்சாளர்களில் ஒருவராகப் பிரபலமாகிக் கொண்டு வந்தார் மாயாவதி.

அப்போது கன்ஷிராம், அரசியல் கட்சி சார்பற்ற "அனைத்திந்திய பிற்படுத்தப்பட்ட மற்றும் சிறுபான்மையினர் சமூக ஊழியர்கள் கூட்டமைப்பு' ஒன்றை நடத்திக் கொண்டிருந்தார். அப்போதுதான் மாயாவதியின் மேடைப் பேச்சு வீரியம் பற்றி அவர் கேள்விப்பட்டு, அவரை நேரில் சந்திக்க விரும்பினார்.

இவர்களின் முதல் சந்திப்பு 1977-இல் நடந்தது. அப்போது மாயாவதி, 'நான் ஐ.ஏ.எஸ். தேர்வுக்கான ஆயத்தங்களைச் செய்து கொண்டிருக்கிறேன். கலெக்டர் ஆவதுதான் எனது லட்சியம்' என்றார்.

கன்ஷிராமோ, 'கலெக்டர் மாதிரியான அரசு அதிகாரிகளெல்லாம் கைகளைக் கட்டிக் கொண்டு நம் முன்னால் நிற்கிற அதிகாரம் படைத்த பதவிகளும் இருக்கின்றன. நான் அப்படிப்பட்ட ஒரு பதவியில் உன்னை அமரச் செய்கிறேன்!' என்று கூற, மாயாவதிக்கு அரசியல் ஆர்வம் வந்துவிட்டது.

கன்ஷிராமும் பகுஜன் சமாஜ் (மெஜாரிடி சமூகத்தினர்) கட்சியை ஆரம்பித்தார். மாயாவதி கன்ஷிராமுக்கு அடுத்தபடியாகக் கட்சியில் பொறுப்புக்கு வந்தார். 89-ல் நடந்த தேர்தலில் பகுஜன் சமாஜ் கட்சியின் முதல் எம்பியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, பாராளுமன்றத்துக்குள் அடியெடுத்து வைத்தார்.

முப்பது வயதைத் தாண்டிய மாயாவதி, புதுதில்லியிலுள்ள கன்ஷிராமின் இல்லத்தில்தான் வசிக்கிறார்; அந்த வீட்டில் எஜமானியைப் போல் தான் அதிகாரம் செய்து கொண்டிருக்கிறார். அப்படியானால் கன்ஷிராமுக்கும் இவருக்கும் இடையிலிருப்பது எப்படிப்பட்டதோர் உறவு? 'சந்தேகமென்ன, ஒரு குருவுக்கும் சிஷ்யைக்கும் இடையிலுள்ள உறவுதான்' என்கிறார் மாயாவதி. ஏன் திருமணம் செய்து கொள்ளவில்லை? 'திருமண உறவுகள் பேராசையைத் தூண்டிவிட்டு, ஊழலுக்கு வழிவகுத்துவிடும்!' என்கிறார், பளிச்சென்று.

— சார்லஸ்




# பேஜ(ா)ர்!

எங்கேயும் எப்போதும் எழுத்து மூலம் ஒருவழித் தொடர்பு கொள்ள உதவும் "ரேடியோ பேஜர்"களை இப்போது வசதியாளர்கள் உபயோகிக்க ஆரம்பித்து விட்டார்கள். தமிழில் பேஜர் செய்தி அனுப்பும் காலம் வந்தால் இப்படி சில செய்திகள் அனுப்பப்படலாம்!





















கற்பனை : நாகலை இளவல்

சென்ற ஆண்டில் வெளிவந்து, தேசிய விருதுகள் பெற்ற படங்கள் மற்றும் நபர்கள் பற்றி கல்கி எழுதிய விமர்சனத்தைக் கீழே தருகிறோம் :



• வைரமுத்து



• ஸ்வர்ணலதா



• உண்ணி கிருஷ்ணன்





• 'காதலன்' தொழில் நுட்பக் குழுவினர்

# விருது பெற்ற படங்கள்: நாம் பார்த்த பார்வை!

**மோகமுள்** *(சிறந்த இயக்குனருக்கான இந்திரா காந்தி விருது. இயக்குனர் : ஞான ராஜசேகரன்) :*

கடைசியில் வந்துவிட்டது! 'அற்புதமான தமிழ் சினிமா' என்று நெஞ்சு நிமிர்த்திச் சொல்லிக் கொள்ளும் அளவுக்கு ஒரு திரைப்படம் வந்தே விட்டது!

- ***கல்கி, 18.12.94.***

**கருத்தம்மா** *(சமூக நலனுக்கான சிறப்பு விருது - டைரக்டர் பாரதிராஜா, சிறந்த பாடலாசிரியருக்கான விருது - கவிஞர் வைர முத்து, சிறந்த பின்னணிப் பாடகிக்கான விருது - ஸ்வர்ணலதா) :*

...ரொம்பவும் கேவலமானதொரு சமூகக் கொடுமை யின் அசலான முகத்தைப் படம் பிடிக்கத் துணிந்த பாரதிராஜா வின் துணிச்சலுக்கு நமது மனமார்ந்த பாராட்டு.

- ***கல்கி, 14.12.94***

**நம்மவர்** *(சிறந்த துணை நடிகருக்கான விருது - நாகேஷ்) :*

...மகள் இறந்துவிடும்போது, நாகேஷின் நடிப்பு, தமிழ் சினிமா இன்றுவரை அறியாத ஒரு கலைப் படைப்பு. அளவிட முடியாத ஆழ்ந்த சோகத்தைக்கூட



இவ்வளவு மென்மையாக வெளியிட முடியும் என்பது ஒரு பாடம் - கற்றுக் கொள்ள விரும்புவோருக்கு....

**- கல்கி, 20.11.94**

**காதலன்** *(சிறந்த ஒலிப்பதிவாளருக்கான விருது - லட்சுமி நாராயணன், எடிடிங்குக்கான விருது - லெனின், ஸ்பெஷல் எபெக்ட்ஸுக்கான விருது - முருகேஷ், பின்னணிப் பாடகருக்கான விருது - உன்னி கிருஷ்ணன்) :*

.....தமிழ் சினிமாவில் ஒரு தொழில் நுட்பப் புரட்சியைக் கொண்டு வந்திருக்கிறார் என்ற அளவில் (டைரக்டர்) ஷங்கரைப் பக்கம் பக்கமாகப் பாராட்டலாம். இரண்டு பாடல் காட்சிகளில் அனிமேஷனைப் புகுத்தி அசத்தியிருப்பதும் ஸவுண்ட் மற்றும் லைட்டிங்கில் ஜாலம் காட்டியிருப்பதும் இனி வரப்போகும் பல படங்களுக்குக் கோனார் நோட்ஸாயிருக்கும்.... அதென்னய்யா, அத்தனை பாட்டிலும் அப்படியொரு ஐஸ்கிரீம் டேஸ்ட்?

**- கல்கி, 30.10.94.**

# சம்மர் ரேின் சுவை!

■ "சம்மருக்கு ஊர் எங்கேயும் அழைச்சிட்டுப் போகலியா"ன்னு தொண தொணத்துக்கிட்டிருந்த என் மனைவியின் வாயை, கல்கி விடுமுறை மலர் '95 ஒண்ணு வாங்கிக் கொடுத்து அடைச்சுப்புட்டேன்!

அரக்கோணம், கலைரசிகன்.

■ விடுமுறை மலர் படித்தேன். குறைந்த விலையில் நிறைந்த மகிழ்வைத் தரும் இனிய மலர். சுற்றுலா கட்டுரைகள் அனைத்தும் நிறம்பட எழுதப்பட்டுள்ளன. 'இடுக்கியைக் கண்டோம்; பிரேமிச்சோம்' என்னும் கட்டுரை மிக நன்று.

கள்ளிகுளம், பா. அமிழ்தன்.

■ ஒரு மாதமாக ஆவலுடன் கடையில் கேட்டுக் கேட்டு விடுமுறை மலர் இன்று கிடைத்தது. ஜில்லென்று இருக்கிறது. பணத் தட்டுப்பாடும், குடும்பச் சூழ்நிலைகளும் கட்டுப்படுத்துவதால் ஆசை இருந்தும் எந்த இடத்துக்கும் விடுமுறையில் செல்ல முடியவில்லை. கல்கி விடுமுறை மலரில் விரிவான கட்டுரைகளில் அந்த அந்த இடத்தைப் பார்த்த திருப்தி ஏற்படுகிறது. இடுக்கி, விசாகபட்டிணம், மைசூர் பாலஸ் காட்சிகள் போன்றவை மிகவும் சிறப்பாக விவரிக்கப்பட்டுள்ளன.

திருச்சி - 21, இந்திரா.

■ 'அசத்துகிறது அக்ஷர்தாம்' உண்மையிலேயே அசத்தியது. இதுவரை கேள்விப்படாத ஒரு கலைப் பொக்கிஷத்தை நம் கண்முன் நிறுத்துகிறது கல்கி விடுமுறை மலர்.

சாத்தூர், எம். செல்லையா.

■ விடுமுறை மலர், எப்போதும் விடுமுறை முடியும் தறுவாயில் வெளி வருவது வருந்தத்தக்கது. வரும் ஆண்டுகளில் விடுமுறை மலரை விடுமுறை ஆரம்பிக்கும் போதே வெளியிட வேண்டுகிறேன்.

பாண்டிச்சேரி, எஸ். சதாசிவம்.



# உங்களுக்காகவே...!

"சுலபத் தவணையின் சொர்க்கம்"

# முரளி அன் கோ

வழங்கும்

## முத்தான மூன்று திட்டங்கள்

## சுலபத் தவணையில் வீட்டு உபயோகப் பொருட்கள் வழங்கும் திட்டம்



## II சுலபத் தவணையில் தங்க நகை சிறுசேமிப்பு திட்டம்

| பிரிவு | மாத சேமிப்பு தொகை | மாதங்களின் எண்ணிக்கை | மொத்த சேமிப்பு தொகை | போனஸ் | தாங்கள் பெறும் தங்கத்தின் | கூடுதலாக சூப்பர் போனஸ் |
|---|---|---|---|---|---|---|
| A | Rs. 100 | 36 | Rs. 3,600 | Rs. 400 | Rs. 4,000 | Rs.500 |
| B | Rs. 200 | 36 | Rs. 7,200 | Rs. 800 | Rs. 8,000 | Rs. 1,000 |
| C | Rs. 500 | 36 | Rs. 18,000 | Rs. 2,000 | Rs. 20,000 | Rs. 2,500 |
| D | Rs. 1000 | 36 | Rs. 36,000 | Rs. 4,000 | Rs. 40,000 | Rs. 5,000 |

இத்திட்டத்தில் சேரும் அனைவருக்கும் திட்டவாரியாக ரூ. 500, 1000, 2500 மதிப்புள்ள தங்க காசுகள் மற்றும் ரூ.5000/- மதிப்புள்ள தங்க செயின்களும் உண்டு.

## III சுலபத்தவணையில் சிறப்பு சிறுசேமிப்புத் திட்டம்

| No. பிரிவு | தினமும் சேமிப்பு தொகை | மொத்த நாட்களின் எண்ணிக்கை | மொத்த சேமிப்பு தொகை | சிறப்பு போனஸ் 10% | தாங்கள் பெறும் மொத்த தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | Rs. 10 | 300 | Rs. 3,000 | 300 | Rs. 3,300 |
| 2. | Rs. 20 | 300 | Rs. 6,000 | 600 | Rs. 6,600 |
| 3. | Rs. 50 | 300 | Rs. 15,000 | 1500 | Rs. 16,500 |
| 4. | Rs. 100 | 300 | Rs. 30,000 | 3000 | Rs. 33,000 |

## விரைந்து சேர்வீர் ! சிறந்து வாழ்வீர் !!

இத்திட்டத்தில் சேர விரும்பும் உள்ளூர் மற்றும் வெளியூர் நபர்கள் கீழ்க்காணும் விலாசத்திற்கு தபால் எழுதினால் விவரங்கள் இலவசமாக அனுப்பி வைக்கப்படும்

## முரளி அன் கோ (முரளி –கோல்ட்)



33, வடமலைப்பிள்ளை தெரு,
புரசைவாக்கம், சென்னை – 600 007
போன்: 6427328



முன்னேற்றத்தின் முதலிடம் முரளி அன் கோ


• காயிதே மில்லத்

காயிதே மில்லத் என்றால் என்ன அர்த்தம் தெரியுமா? சமுதாயத்துக்கு வழிகாட்டும் தலைவர் என்று பொருள். நாகை–காயிதே மில்லத் மாவட்டத்துக்குப் பெயர் தந்த அந்த முஸ்லிம் லீக் தலைவரின் நூற்றாண்டு இது. அவர் எப்படியெல்லாம் வழிகாட்டியாகத் திகழ்ந்தார் என்று இங்கே நினைவு கூர்கிறார் முஸ்லிம் லீகின் (தமிழ்நாடு) தற்போதைய தலைவர் ஏ.கே.ஏ. அப்துஸ் சமது:

# இவரல்லவா தலைவர்!



**பா**க். பிரிவினையின் போது இந்திய முஸ்லிம் லீகின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் காயிதேமில்லத். பாக். முஸ்லிம் லீக் தலைவர்களான ஜின்னா, லியாகத் அலிகான் போன்றோரிடம் அவர் விடைபெற்றபோது, கட்சியின் வங்கிக் கணக்கில் நாற்பது லட்சம் ரூபாய் இருப்பதாகவும், அதில் 11 லட்ச ரூபாயை இந்திய முஸ்லிம் லீக்குக்குப் பிரித்துக் கொடுத்து விடுவதாகவும் சொன்னார்கள். பணத்தை வாங்க மறுத்து விட்டார் காயிதேமில்லத். "இந்தப் பணத்துக்காகத் தான் கட்சிப் பணியில் ஆர்வமாகப் பங்கேற்றேன் என்று கெட்ட பெயர் வந்துவிடும். இது இல்லாமலே கொள்கை அடிப்படையில் கட்சியை நடத்திச் செல்வேன்" என்று மன உறுதியுடன் சொல்லி விட்டார்.


• சமது

அது மட்டுமல்ல, லியா கத் அலிகானிடம் (இவர் பாக். பிரதமராய் இருந் தவர்) "நாங்கள் இப்போது வேற்று நாட்டைச் சேர்ந்த வர்கள். எங்கள் பிரச்னைகளில் நீங்கள் தலையிட முயற்சி செய்யக் கூடாது; எங்களுக்கு நீங்கள் பரிந்து பேச வேண்டியது மில்லை" என்றார். மேலும், "நான் உங்களைக் கேட்டுக் கொள்வது ஒன்றே ஒன்றுதான்: உங்கள் நாட்டுச் சிறுபான்மை இனத்தவரை (ஹிந்துக்கள்) கௌரவமாக நடத்துங்கள். அது எங்களுக்குப் போதுமானது" என்று அவர் சொன்ன போது லியாகத் அலிகானின் கண்கள் கலங்கின.

**நெ**ல்லை மாவட்டம், பேட்டை என்ற ஊரில் கைத்தறித் துணி வியாபாரிகள் குடும்பத்தில் பிறந்தவர் காயிதே மில்லத். பெற்றோர் வைத்த பெயர்: முகம்மது இஸ்மாயில். பள்ளிப் படிப்பை நெல்லை மிஷன்

பள்ளியில் முடித்து, சென்னை கிறிஸ்துவக் கல்லூரியில் பி.ஏ. சேர்ந்து, அதை முடிக்காமலே சுதந்திரப் போராட்டத்தில் சேர்ந்து விட்டார்.

1945இல் சென்னை சட்ட மன்ற உறுப்பினரானவர், அதன் பிறகு 1972இல் காலமாகும் வரை, மாறிமாறி சட்டமன்ற அல்லது பாராளுமன்ற உறுப்பினராக இருந்து வந்தார். அரசியல் நிர்ணய சபையில் இவர் இருந்தபோது, தமிழ் மொழியே இந்தியாவின் பொது மொழியாக இருக்கத் தகுதி பெற்றது என்று பரிந்துரைத்தார். "இந்தியாவின் பிரிக்க முடியாத அங்கம் காஷ்மீர்" என்று பாராளுமன்றத்தில் பேசியிருக்கிறார்.

எவ்வளவு பொறுப்புகள், பதவிகள் வகித்தபோதும் அவர் எளிமை அவரை விட்டு அகலவில்லை. குரோம்பேட்டையில் தாம் குடியிருந்த வீட்டிலிருந்து மண்ணடியில் முஸ்லிம் லீக் அலுவலகத்துக்கு மின்சார ரயிலிலும் ரிக்ஷாவிலுமாக வருவார். லீக் தொண்டர்கள், தலைவரின் வசதிக்காக நிதி சேர்த்து ஒரு கார் வாங்கிக் கொடுத்தார்கள். கார் சாவியை வாங்க மறுத்தார் காயிதே மில்லத். "காரை உடனே எடுத்துப் போய் விடுங்கள்; அதைப் பராமரிக்க எனக்கு வசதியில்லை" என்று சொல்லி விட்டார்.

ஹமீதா பீவி– காயிதே மில்லத் தம்பதிக்கு ஒரே மகன்– பெயர் மியாகான். கல்லூரிப் பருவம் அடைந்த சமயத்தில் மியாகானுக்கு எஞ்சினியரிங் சீட் கிடைத்தது.

ஒரு நாள் சட்டமன்ற 'லாபி'யில் அமைச்சர் ஒருவர் காயிதே மில்லத்தைச் சந்தித்தார். "உங்கள் மகன் எப்படி எஞ்சினியரிங் படிக்கிறான்?" என்று விசாரித்தார்.

அதிர்ச்சியடைந்த காயிதே மில்லத் "என் மகன் எஞ்சினியரிங் படிப்பது உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்க, "விண்ணப்பத்தில் உங்கள் பெயர் பார்த்து தான் அட்மிஷன் கொடுத்தோம்" என்று பதில் சொல்லியிருக்கிறார் அமைச்சர்.

அவ்வளவுதான்! நேராக வீட்டுக்குப் போனார் காயிதே மில்லத். "நாளையிலிருந்து கல்லூரிக்குப் போகக் கூடாது!" என்று தடை செய்து விட்டார்.

இத்தகைய நேர்மையாளருக்கு ராஜாஜியிடம் மிருந்த ஈடுபாடு இருந்ததில் அதிசயமில்லை. மூதறிஞர் அவரை 'தம்பி' என்று தான் அன்புடன் அழைப்பார். தமிழகத்தில் காங்கிரஸைத் தோற்கடிக்க, ராஜாஜி–அண்ணாவுடன் கூட்டுச் சேர்ந்தது முஸ்லிம் லீக். பின்னர் கருணாநிதி மதுவிலக்கைத் தளர்த்தியபோது (1972) மனமுடைந்து போனார் காயிதே மில்லத். அந்த வருத்தம் அவருக்கு இறுதிவரை இருந்தது–

"

–இவ்வாறு சொல்லி முடித்த அப்துஸ் சமதுக்கும் ஒரு வருத்தம் உண்டு. இன்று முஸ்லிம் லீகை வழி நடத்த காயிதே மில்லத் போன்ற ஒரு தலைவர் இல்லையே என்ற வருத்தம்!

தொகுப்பு : ப்ரியன்

---

## மைக்கேல்... ...ஜாக்ஸனா மைக்கேலாம்!



● "அடுத்த பிறவியில் யாராகப் பிறக்க ஆசை?" என்ற கேள்விக்கு மார்ட்டினா நவ்ராத்திலோவா அளித்திருக்கும் பதில்: "மைக்கேல் ஜாக்ஸன்!"

● சில ஆண்டுகளுக்கு முன் விம்பிள்டன் பந்தயத்தில் கலந்து கொண்ட வீராங்கனைகளில் சிலர் மிகக் குறைந்த உயரமே கொண்ட ஸ்கர்ட்டுகளை அணிந்திருந்தனர். அந்த உடையை "Jesus wept" என்று குறிப்பிட்டிருந்தன அமெரிக்க நையாண்டிப் பத்திரிகைகள். பைபிளில் இருக்கும் மிகக் குட்டியான செய்யுள் 'ஜீஸஸ் வெப்ட்'.

● "உலகின் கடைசி டினோசர்" என்று ஜான் மெக்கென்ரோ ஜிம்மி கானர்ஸைக் குறிப்பிட்டார்!

● யு.எஸ்.ஓப்பன், ஆஸ்திரேலிய ஓப்பன், பிரெஞ்சு ஓப்பன், விம்பிள்டன் ஆகிய நான்கு பந்தயங்களிலும் ஒரே ஆண்டு வெற்றி பெற்றால் 'கிராண்ட் ஸ்லாம்' என்பார்கள். அந்த நான்கு பந்தயங்களுடன் ஒலிம்பிக்கிலும் வென்றால் 'கோல்டன் கிராண்ட் ஸ்லாம்' என்பார்கள்.



● "அவர் ஒரு ஈயைப் போன்றும், கொசுவைப் போன்றும் இருக்கிறார். (பந்தயத்தின்போது) எல்லா இடத்திலும் காணப்படுகிறார். அங்கும் இங்கும் ஓடிக் கொண்டே இருக்கிறார்.'' இப்படி சமீபத்தில் மைக்கேல் சாங்கை விமர்சித்தார் இவானிசெவிக்.

— ஜி.எஸ்.எஸ்.

# Kalki Shopping Page

## PADMASHRI PEARLS

ANNOUNCES

THE IRRESISTIBLE OFFER
YET AGAIN!

BUY ANY OF YOUR BIRTHSTONES
(FREE PRESCRIPTION BY US ACCORDING TO YOUR
DATE-OF-BIRTH AND
JANMA-NAKSHATRAM)
AND GET IT SET IN A SILVER RING FOR
A-B-S-O-L-U-T-E-L-Y F-R-E-E.
(OR)
IN GOLD AGAINST
ORDER WITH NO MAKING CHARGES.
Also avail Special 20% Discount on all other items on Display

* Padmashri Pearls
Pearl Dealers & Quality Gems.
53, North Usman Road, (Opp. ARR Complex),
T. Nagar, Madras - 17.
* Padmashri Pearls
M.G. Road, Secunderabad.

## RANI SAREES

CHECK THE CLOTH
LABEL AND PURCHASE

**BENGAL COTTON SAREES**

BEST QUALITY ATTRACTIVE
DESIGNS AND PLEASING
COLOURS 10% DISCOUNT

**MADURAI TEXTILES**
2, SIVAPRAKASAM ROAD,
PONDY BAZZAR,
MADRAS-17.
(Nearer to Vegetable Market)

WANTED SALES MEN

ஸ்ரீராமபிரானுக்குப் பாலம் அமைக்க சின்னஞ்சிறு அணிலும் மண் சுமந்தது.
உங்கள் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பாலம் அமைக்க நாங்களும் உதவ முடியும்

## நடராஜ் ஃபைனான்ஸ்

12 மாதங்களுக்கு, ரூ. 10,000 டெபாஸிட் செய்கிறவர்களுக்கு ஒரு கிராம் தங்கக்காசு (22 காரட்) முற்றிலும் இலவசம். - சில தினங்களுக்கு மட்டுமே.
வழக்கமான பரிசு 4% + பென்ஷனர்ஸ் 1%

**வட்டி 24% P.A.**

6 மாதம் | 12 மாதம் | 24 மாதம் | 36 மாதம்

● 6 மாதத்துக்குப் பிறகு ரினிவல் ● ஒவ்வொரு ரினிவலுக்கும் 4% பரிசு உண்டு.
● 36 மாதங்களுக்கு ரூ. 12,000 டெபாஸிட் செய்து 24 மாதங்களில் 3 சவரன் தங்கம் பெறலாம். ● 3 ஆண்டுகளில் உங்கள் டெபாஸிட் இரட்டிப்பாகிறது
சீட்டு குரூப்பில் லோன் வசதி ● தவணை முறையில் பண்ணை வீடு



CALL : 4342098, 4840150

**NATARAJ FINANCE & INVESTMENTS**
NATARAJ CHITS (TAMILNADU) PVT LTD.,
NATARAJ ESTATES–FARM HOUSE PROMOTERS
"Shanthi Complex", 3rd Floor, 26-Ranganathan St.,
T. Nagar, Madras-600 017. B.O. KANCHEEPURAM-1.


















புதிய கிளை – தஞ்சாவூரில் – விரைவில் எதிர்பாருங்கள்

# Kalki Shopping Page

பாடப் புத்தகத்தில் ஜெயலலிதா பற்றிய பாடம்...

அ - அன்புத் தலைவி
ஆ - ஆதிபராசக்தி
இ - இணையில்லா தலைவி
ஈ - ஈகைச் செல்வி

அ... அன்புத் தலைவி

அ... அன்புத் தலைவி...



1995 ஜூன் 18
யுவ ஆனி 4
மலர் : 53
இதழ் : 46

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



# தாக்கப்படும் தமிழர்கள்!

மணிப்பூரில் பர்மா எல்லை அருகே வாழும் சில தமிழர்கள் தாக்கப்பட்டிருக்கிறார்கள். இதற்காக மனம் உருகி முதல்வர் ஜெ., பிரதமர் ராவுக்குக் கடிதம் எழுதியிருக்கிறார். இம்மாதிரி மீண்டும் நேராதிருக்க ராணுவத்தை அனுப்ப வேண்டும் என்றும் தற்போது தாக்கப்பட்டிருப்பவர்களுக்கு நஷ்டஈடு வழங்கப்பட வேண்டும் என்றும் கேட்டிருக்கிறார். ரொம்ப சரி, வரவேற்கிறோம். ஆனால் 'தமிழ்நாட்டில் தமிழர்களால் தாக்கப்படுகின்ற தமிழர்களுக்கு யார் பாதுகாப்பு தரப் போகிறார்கள்? யாரிடம் போய் முதல்வர் புகார் செய்வார்? என்ன நஷ்டஈடு, யார் தரப் போகிறார்கள்?' என்றும் முதல்வரைக் கேட்க விரும்புகிறோம்.

பொதுவாகவே தமிழகத்தில் கொலை, கொள்ளை போன்ற வன்முறைகள் அதிகரித்து வருவதுடன், திட்டமிட்ட தாக்குதல்களும் தங்குதடையின்றி நடக்கின்றன. சந்திரலேகா தொடங்கி, வழக்கறிஞர் விஜயன், துணைவேந்தர் அனந்த கிருஷ்ணன், அமைச்சர் சிதம்பரம், சு. சுவாமி என்று பலரும் வெறிச் சம்பவங்களுக்கு உள்ளாகியிருக்கின்றனர். அனைத்திலும் வெட்கக் கேடானது சமீபத்தில் தி.மு.க. வழக்கறிஞர் சண்முகசுந்தரம் தாக்கப்பட்டதாகும்.

ஆட்சியில் நடக்கும் தவறுகளைத் தட்டிக் கேட்கும்விதமாக ஒருவர் நீதி மன்றத்தை நாட இருக்கிறார் என்று அறிந்ததுமே அவர் மீது குண்டாந்தடி தாக்குதல்




நடத்தி கை கால்களை முறிப்பது என்றால் நடப்பது ஆட்சியல்ல, அராஜகமே. ஒன்று, முதல்வர் இவற்றைக் கட்டுப்படுத்த திராணியற்று இருக்கிறார்; அல்லது மறைமுகமாக ஊக்குவிக்கிறார். இந்த முடிவை, சு. சுவாமி - ரவி புகைப்படமானது ஒரு திட்டமிட்ட மோசடி என்று நிரூபணமாகியிருப்பது மேலும் உறுதி செய்கிறது. 'இன்று வழக்கறிஞர்கள் மீது இவ்வாறு வன்முறை ஏவி விடப்படுமானால் நாளை நீதிபதிகளின் நிலை என்ன?' என்ற கேள்வியும் எழுகிறது.

இவ்வளவு மோசமான நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்ட தமிழகத்தை இனி முதல்வரால் காப்பாற்ற முடியாது. அவர் ஒரு மணி நேரம் தரிசித்து பிரார்த்தனை செய்த மன்னார்குடி ராஜகோபாலசுவாமி மனமிரங்கினால்தான் உண்டு!

## ரேஷன் அரிசி விலை குறைப்பு!

தேர்தல் நெருங்கி வருவதை உணர்ந்து, முதல்வர் ஜெயலலிதா ரொம்பவும் கலங்கிப் போயிருக்கிறார் என்பதை ரேஷன் அரிசி மீண்டும் விலைக்குறைப்பு உணர்த்துகிறது! பட்ஜெட்டின்போதுதான் நிதி அமைச்சர், அனைத்து ரக அரிசியின் விலைகளையும் குறைத்தார். 75 நாட்களுக்குள் மீண்டும் மோட்டா ரக அரிசி விலை குறைக்கப்பட்டு, கிலோ ரூ. 2 என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. தற்போது சன்னரக அரிசி விலை குறைக்கப்படவில்லை.

மோட்டா ரக அரிசியை ஏழை பாழைகள் கூட வாங்கி இட்டிலிக்கு உலடத்து மாவாக்கிக் கொள்கிறார்களே தவிர, சோற்றுக்குப் பயன்படுத்துவதில்லை. 'அதை




உருட்டி உண்பதைவிட ரப்பர் பந்தை உண்ணலாம்' என்பர். ஏதோ சன்னத்தில் பாதி, மோட்டாவில் பாதி என்று வாங்கிச் சமாளிக்கிறார்கள். இந்த நிலையில் மோட்டா அரிசி விலையைக் குறைப்பதன் மூலம் ஆளும் கட்சி, ஏழைகளின் வோட்டுக்களைப் பெற நினைப்பது, கால் கடுக்க ரேஷன் கடை முன்னால் கியூ வில் நிற்போரை அவமதிப்பதாகும்.

பட்ஜெட்டின் போது அரிசி விலைக் குறைப்பை அறிவித்த நெடுஞ்செழியன், அதனால் அரசுக்கு ஏற்படும் இழப்பு ரூ. 150 கோடி என்றும் மொத்த உணவு மான்யம் ரூ. 600 கோடியாக உயரும் என்றும் அறிவித்தார். தற்போது மேலும் ரூ. 18 கோடி கூடுதல் இழப்பு ஏற்படுகிறது.

இந்த ரூ. 618 கோடியை ஜெயலலிதா தமது சொந்தப் பணத்திலிருந்து ஈடு செய்யப் போவதில்லை; கட்சிப் பணத்திலிருந்தும் கொடுக்கப் போவதில்லை. எந்த ஏழைபாழைகள் அரிசி விலைக் குறைப்பால் மகிழ வேண்டும் என்று ஆளும் கட்சி எண்ணுகிறதோ, அதே ஏழைகள்தாம் கொடுத்து அழப் போகிறார்கள் - மறைமுக வரிகளாக! ஆக, இந்த விலைக்குறைப்பு என்பதெல்லாம் ஒரு கண் துடைப்பேயன்றி வேறில்லை.

உண்மையான முன்னேற்றம் என்பது மக்களுக்கு வேலை வாய்ப்புக்களைப் பெருக்கி அவர்களின் வாழ்க்கைத்தரம் உயரச் செய்வதுதான். அதற்கான அடிப் படை வசதிகளை அதிகரிப்பதுதான் அரசின் பணி. ஆனால் இதற்கு, படிப்பற்ற ஏழைகளை ஏமாற்றி வோட்டுப் பெற நினைக்கும் அரசியல் உதவாது; அறிவு சார்ந்த அரசியல் தேவை.

# வாழ்க்கையை ஊடுருவும் வாசனைத் திரவியங்கள்!






'பர்ஃப்யூம்' என்கிற இந்த வாசனை சமாசாரமெல்லாம் பணக்காரர்களும் 'ஷோக்கு'ப் பேர்வழிகளும் உபயோகப் படுத்துகிற ஓர் ஆடம்பரமான விஷயம் என்கிற காலம், சுத்தமாக மலையேறி விட்டது. குடிசைவாசிமுதல் கோபுரவாசி வரை எல்லோருடைய அன்றாட வாழ்க்கையும் இந்த பர்ஃப்யூம் வாசனையோடுதான் கமகம வென்று துவங்குகிறது!

'நோ.. நெவர்... நான் முகப் பவுடர் கூடப் பூசி கொள்வ தில்லை. எத்தனை சோப்புகள் வந்தபோதும் நான் இன்ன மும் பச்சைப் பயிறை மாவாக்கித்தான் தேய்த்துக் குளிக்கிறேன்!' என்று ஆக்ரோஷப்படுபவர்கள்கூட கொஞ்சம் அமைதி பெறு வது அவசியம்.

நீங்களும் பல் துலக்கு வதற்குப் பற்பசையைத்தான் உபயோகப் படுத்துகிறீர்கள். அதில் கலந்திருக்கிறது பர்ஃப்யூம். வெற்றிலை, சீவலில் வேண்டுமானால் பர்ஃப்யூம் இல்லாமல் இருக் கலாம். ஆனால், அந்த வாசனை சுண்ணாம்பிலும் பன் னீர்ப் புகையிலையிலும் இருக்கிறது பர்ஃப்யூம். ஊதுபத்தி யில் மாத்திரமல்ல; துணி துவைக்கிற சோப்புகளிலும் இருக்கிறது பர்ஃப்யூம்!

இத்தனை தூரம் சுற்றி வளைப்பானேன்? ஆப்டர் ஷேவ் லோஷனிலிருந்து, சிகரெட், பான்பராக்வரை அத் தனை பொருள்களிலும் எங்கும் எங்கிலும் நீக்கமற நிறைந் திருக்கிறது இந்த பர்ஃப்யூம். இப்படிப்பட்ட இந்த வாச னைப் பொருள்களின் வரலாறுதான் என்ன?

மலர்கள் வாசனையானவை என்பது எல்லா மனிதர்களும் அறிந்த விஷயம்தான். பிறகு சந்தனம், சாம்பிராணி(ஒருவகை மரத்தின் பிசின்) போன்றவற்றை எரிக்கிற போது வருகிற புகையில் நறு மணம் கமழ்வதைக் கண்டார் கள். இப்படிப் புகையின் மூலம் நறுமணம் வருவதாலோ என்னவோ, 'புகையின் மூலமாக' என்கிற அர்த்தமுடைய per fumum என்கிற லத்தீன் சொல்லே பர்ஃப்யூம் என்கிற சொல்லா னது.

இதுமாதிரியான வாசனைப் பொருள்களை எகிப்தியர்கள்,

சீனர்கள், இந்துக்கள், அராபியர்கள், கிரேக்கர்கள், ரோமானியர்கள், என்று அனைவருமே அறிந்திருந்தார்கள். எல்லா மதத்தினரும் தங்கள் மதவழிபாட்டின் போது பயன்படுத்தவும் செய்தார்கள். பிறகுதான் கஸ்தூரி மானிலிருந்து கஸ்தூரி போன்று, மிருகங்களிடமிருந்தான வாசனைப் பொருள்களைக் கண்டறிந்தார்கள்.

இருப்பினும் சுமார் 1300 ஆண்டுகளுக்கு முன்பே, ரோஜா, மலர்களிலிருந்து அத்தர் என்கிற வாசனைத் திரவத்தை எடுக்க முடியும் என்று முதன்முதலில் கண்டறிந்தவர்கள் அராபியர்கள்! இதனால்தான் ஷேக்ஸ்பியர் தமது மாக்பெத் நாடகத்தில் All the perfumes of Arabia cannot sweeten this little hand என்று குறிப்பிட்டாரோ என்னவோ!

"ஒரு கிலோ அத்தர் எடுப்பதற்கு எவ்வளவு ரோஜாப் பூ தேவைப்படும் தெரியுமா?'' என்று கேட்டார், சென்னை-குரோம்பேட்டையிலுள்ள முன்னணி செண்ட் தயாரிப்பு நிறுவனங்களுள் ஒன்றான மஷ்மெயர் அரோமாட்டிக்ஸ் (இந்தியா) லிமிடெட்டின் நிர்வாக இயக்குனர் எஸ்.ஏ. முகம்மது ஷரீப்.

"பத்து அல்லது இருபது கூடை ரோஜாப்பூக்கள் தேவையாயிருக்கும்!'' என்று நாம் சொன்னதும் கடகடவென்று சிரிக்க ஆரம்பித்து விட்டார், முகம்மது ஷரீப்.

"டன் கணக்கில் தேவைப்படும். மல்லிகைப் பூக்களும் இதே மாதிரிதான். அதனால்தான் ஒரு கிலோ அத்தரின் விலை இரண்டு லட்சம் அளவுக்கு விலை இருக்கிறது!''

"அடேயப்பா!''

"இதற்கே இப்படியென்றால், ஊத் (Ooth) என்கிற மரத்திலிருந்து எடுக்கப்படுகிற ஒரு கிராம் எண்ணெய்யின் விலை இருபதாயிரம் என்றால் என்ன சொல்லுவீர்கள்?''

"இவ்வளவு விலை கொடுத்து வாங்குவதற்கும் ஆட்கள் இருக்கிறார்களா என்ன?''

"அராபியர்கள் என்ன விலை கொடுக்கவும் தயாராக இருக்கிறார்கள்!''

"அவர்களுக்குச் சரி. மற்றவர்கள்? சாதாரண ஜனங்கள்?''

"அவர்களுக்குத்தான் சிந்தடிக் பர்ஃப்யூம்கள் இருக்கின்றனவே! அவற்றைத்தான் எங்களைப் போன்றவர்கள் தயாரித்துக் கொடுக்கிறோம். அதாவது செயற்கையான வாசனைத் திரவங்கள்!''

"என்னதான் இருந்தாலும் இயற்கையான வாசனைக்கும் செயற்கையான வாசனைக்கும் வித்தியாசம் இருக்கத்தானே செய்யும்?''

"உங்கள் இரண்டு கைகளையும் நீட்டுங்கள்!'' என்றவர், நமது இரண்டு கைகளிலும் இருவேறு வாசனைத் திரவங்களைத் தடவி விட்டார். "இவற்றில் ஒன்று இயற்கையானது; மற்றது செயற்கையானது. வித்தியாசத்தைக் கண்டு பிடித்துவிட முடிகிறதா, பாருங்களேன்!''

இரண்டையும் மாறிமாறி வாசனை பிடித்தும் நம்மால் கண்டே பிடிக்க முடியவில்லை. இரண்டும் ஒரே மாதிரிதான் வாசனையடித்தன. முடியவில்லை என்பதை ஒப்புக் கொண்டோம்.



• செயற்கை பர்ஃப்யூமுக்கான மூலப் பொருள்களின் தரம் கம்ப்யூட்டர் மூலம் பரிசோதிக்கப்படுகிறது.



• இப்படி மோந்து பார்த்தே வித்தியாசம் உணர்வார்கள் நிபுணர்கள்.



"சிந்தடிக் பர்ஃப்யூம்களின் வெற்றியே இதில்தான் அடங்கியிருக்கிறது. அதோடு, இயற்கையான பர்ஃப்யூம்கள் இரண்டொரு மணி நேரத்துக்குத்தான்

• முகம்மது ஷரீப்

◐◐ பர்ஃப்யூம்கள் வெப்பத்தில் ஆவியாகி விடக் கூடியவை. எனவே, உடலில் உபயோகிக்கும்போது முழங்கால் மடிப்புகள், இமைகளின் மடிப்புகள், கழுத்து மற்றும் காதுகளின் பின்புறங்கள் போன்ற இடங்களில் உபயோகிக்கலாம். இருப்பினும் நேரடியாகச் சூரிய ஒளி படுகிற இடங்களில் உபயோகப்படுத்தினால், சிலருக்கு அந்த இடங்களில் தேமல் மாதிரி வருவதற்குச் சாத்தியமுண்டு.

◐◐ பர்ஃப்யூம் வாசனை நீண்ட நேரம் கமழ வேண்டுமென்று விரும்புகிறீர்களா? உபயோகிக்கும் இடத்தில் சிறிது வாசலினைத் தடவிய பிறகு பர்ஃப்யூமை உபயோகியுங்கள்.

நறுமணம் கொடுக்கும். ஆனால், செயற்கையானவையோ நாள் முழுவதும் உங்களிடமிருந்து நறுமணத்தைப் பரப்பிக் கொண்டேயிருக்கும்!''

''செயற்கையானவற்றிலும் விலை வித்தியாசங்கள் உண்டா?''

''உண்டு. வாசனையின் தரத்தையும் சதவிகிதத்தையும் பொறுத்து விலை வித்தியாசப்படும். உதாரணத்துக்கு சலவைச் சோப்பில் கலக்கப்படும் பர்ஃப்யூமுக்கும், உயர்தர டால்கம் பவுடரில் கலக்கப்படும் பர்ஃப்யூமுக்கும் வித்தியாசம் இருக்கத்தானே செய்யும்!''

''நறுமணத்துக்காக நாம் நமது ஆடைகளின்மேல் ஸ்பிரே செய்து கொள்கிற பர்ஃப்யூம்களிலும் இது மாதிரியான வித்தியாசங்கள் உண்டா?''

''உண்டு. சாதாரணமாக ஒரு பர்ஃப்யூம் பாட்டிலை எடுத்துக் கொண்டால் அதில் ஐந்திலிருந்து பத்து சதவிகித அளவுக்குத்தான் ரோஜா, மல்லிகை போன்ற நறுமணப் பொருள் கலக்கப்படுகிறது. மீதியெல்லாம் வெறும் ஆல்கஹால்தான்! எனவே கலக்கப்படுகிற சதவிகிதத்தைப் பொறுத்தும் வெவ்வேறு நறுமணங்களின் தன்மைகளைப் பொறுத்துமே விலைகள் நிர்ணயிக்கப்படுகின்றன.''

''ஆக, நான் சந்தன வாசனையுள்ள டால்கம் பவுடரைப் பூசிக் கொள்கிறேன் என்றாலோ அல்லது ரோஜா வாசனையுள்ள பர்ஃப்யூமை ஸ்பிரே செய்து கொள்கிறேன் என்றாலோ நிஜமான சந்தனத்தின் வாசனையையோ, நிஜமான ரோஜாவின் வாசனையையோ அனுபவிப்பதில்லை. சந்தனம், ரோஜா போன்ற செயற்கையான வாசனைகளைத்தான் அனுபவிக்கிறேன் என்று அர்த்தமா?''

''ஏறத்தாழ எல்லாமே செயற்கைதான். முன்னே சொன்ன மாதிரி இயற்கையெல்லாம் சராசரி மனிதர்களுக்குக் கட்டுப்படியாகாது!''

''இப்படி செயற்கையான ரசாயனப் பொருள்களால் தயாரிக்கப்படும் பர்ஃப்யூம்களால், உடல் நலத்திற்குத் தீங்கு ஏதும் ஏற்படாதா?''

''இடையவே இடையாது. முழுக்க முழுக்கப் பரிசோதனை செய்யப்பட்ட பிறகே, வெவ்வேறு வாசனைகளுக்கான வெவ்வேறு ரசாயனப் பொருள்களின் கலவைகளைத் தயார் செய்கிறோம். எனவே, உடல் நலத்திற்குக் கொஞ்சமும் கெடுதல் ஏற்படாது.''

''சிலருக்கு அலர்ஜி ஏற்படுவதாகச் சொல்கிறார்களே?''

''மல்லிகைப் பூவை மோந்து பார்த்தால் கூடத்தான் சிலருக்குத் தலைவலி வருவதாகச் சொல்கிறார்கள். அதனால், மல்லிகைப் பூவே கெடுதல் என்று சொல்லி விட முடியுமா? அதுபோல்தான் இதுவும். செயற்கை பர்ஃப்யூம்களால் எந்தவிதமான கெடுதலும் இல்லையென்று எங்களால் நூறு சதவிகிதம் உத்தரவாதம் தர முடியும்!'' என்றார் எஸ்.ஏ. முகம்மது ஷரீப்.

கடைசியாக நாம் விடைபெற்றுத் திரும்பும்போது திடீரென்று நமக்கொரு சந்தேகம். ஆண்களுக்கென்றும் பெண்களுக்கென்றும் தனித்தனியான பர்ஃப்யூம்கள் விற்கப்படுகின்றனவே? இரண்டுக்கும் வாசனையில் என்ன வித்தியாசம்?

''இயல்பாகவே ஆண்கள் வேகமானவர்கள். பெண்களோ மென்மையானவர்கள். இந்த இயல்புகளைப் பிரதிபலிக்கிற விஷயம் தான் பர்ஃப்யூம்கள். வித்தியாசத்தை நீங்களே பாருங்களேன்!'' என்று இரண்டையும் நமது இரண்டு கைகளில் தடவி விட்டார்.

நிஜம்தான். ஆண்களுக்கான பர்ஃப்யூமின் வாசனை புயல்போல பளிச்சென்று நமது நாசியைத் தாக்கியது. பெண்களுக்கான பர்ஃப்யூமோ தென்றலைப் போல நிதானமாக வந்து நமது நாசியை வருடியது!

ஆயினும் இப்போது காலம் மாறிக் கொண்டிருப்பதால் இரண்டு பேருக்கும் பொதுவான பர்ஃப்யூம்களும் வந்து விட்டன. அதாவது புயலுக்கும் தென்றலுக்கும் இடையிலான ஒரு நிலையில்!

**- பிரின்ஸ்**

அட்டையில்: **ஜெயலட்சுமி**

அட்டை வண்ணப்படம், படங்கள்: **காமேரா திருஞானம்.**



# T.S.S. NIDHI LTD. ESTD 1973

**THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED**

Regd. Off.: 230, R.K. Mutt Road, Mylapore, Madras 600 004. ☎ 4942303 / 4943365

**BRANCHES :**
**THIRUVANMIYUR** : 112, Thiruvalluvar Salai, Kamaraj Nagar, Madras - 41. ☎ 410058
**TONDIARPET** : 667, T.H. Road, Madras - 81. ☎ 5950472
**SAIDAPET** : 11, Jones Road, Madras - 15. ☎ 4851468

## FIXED DEPOSIT SCHEME

| Period (Months) | 12 | 24 | 36 | 60 |
|---|---|---|---|---|
| Rate of Int. P.A. | 17% | 18% | 19% | 20% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan) For Deposit of Rs.1,000/-

| Period (Months) | 12 | 24 | 36 | 45 | 67 |
|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1190 | 1425 | 1760 | 2025 | 3025 |

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME

Minimum Deposit Rs. 10,000/-

Period - 12 months

Interest payable monthly **19.5%**

Interest payable annually **21%**

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS)

## T.S.S. SPECIAL DEPOSIT SCHEME

For Deposit of Rs.10,000/-

| Period (Months) | Maturity Value |
|---|---|
| 120 | Rs.66,000 |
| 180 | Rs.1,82,000 |

## RECURRING DEPOSIT SCHEME

MONTHLY DEPOSIT Rs. 100/-

| Period in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| Maturity Value | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Week Days | | Sunday | Holiday |
|---|---|---|---|---|
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

## *HIGHLIGHTS

- Recognised as a **NIDHI COMPANY** by Central Government of India.
- Company is in 22nd year of service.
- Transaction with members only (Rupees two only for membership)
- Premature repayment facility as per terms and conditions.
- Monthly Interest Warrants would be despatched in advance for the year of Deposits.

## LOANS

★ A) Jewel loans granted on Gold ornaments at Rs.300/- per gms. (Rs.2400/- per 8 gms.)
- ★ No Ceiling
- ★ No Charges
- ★ No Interest Tax
- ★ Recurring Deposit not required
- ★ Your Jewels are insured at our cost.

B) Property Mortgage Loans granted on RD basis within Madras city limits.

**P.S. SAMBASIVAM**
Secretary

**G. KUMARAVELU**
Vice-President

**K.R.V. RAMANI**
President

ஒவ்வொரு இடத்திலும் ஆயிரக் கணக்கான மக்கள் தங்களை வணங்கி ஆசி பெறுகிறார்கள். இது உணர்த்துவது என்ன?

**சுவாமிகள்:** ஜனங்களுக்கு பக்தி சிரத்தை அதிகரித்திருக்கிறது. ஆன்மீகத்திலே அதிக ஈடுபாடு ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் உணர்ந்தோம்.

இந்து மதம் என்பது வாழ்க்கை முறை என்று சொல்லுவார்கள். இன்றைய அவசர யுகத்தில், இயந்திரகதியான வாழ்க்கைச் சூழ்நிலையிலும் கூட இந்தக் கோட்பாடு ஏற்றுக் கொள்ளக் கூடியதுதானா?

**சுவாமிகள்:** வாழ்க்கை எத்தனை மெக்கானிக்கலாக இருந்தாலும் கூட, சில அடிப்படைக் கோட்பாடுகள் என்றைக்குமே மாறாது. ஒரு கொள்கையும் இல்லாமல் நடத்தப்படும் வாழ்க்கைக்கு என்ன அர்த்தம் இருக்கிறது? அப்பா, அம்மாவை மதித்து, வணங்கணும்; எப்போதும் உண்மையைச் சொல்லணும்; கோவிலுக்குப் போகணும்; பிறருக்குத் தொந்தரவு செய்யக் கூடாது; முடிஞ்சவரை அடுத்தவருக்கு உபகாரம் செய்யணும். இதெல்லாம் வாழ்க்கையினுடைய அடிப்படைக் கோட்பாடுகள். இது எல்லாம் இன்றைக்கும் கடைப்பிடிக்க வேண்டியவைதானே? இன்றைய சூழ்நிலையில்தான் இவையெல்லாம் ரொம்ப ரொம்ப அத்தியாவசியம். கொள்கை இல்லாவிட்டால், மனிதனுக்கும் மிருகத்துக்கும் என்ன வித்தியாசம்? அந்த கொள்கைகளை போதிப்பதுதான் இந்துமதம்.

இன்றைய இளைய தலைமுறையினருக்கு, மதம் பற்றிய ஆழ்ந்த ஞானம் இல்லையே. இதற்கு என்ன காரணம்.

**சுவாமிகள்:** இன்றுள்ள கல்விமுறைதான் அதற்குக் காரணம். நாம் சின்ன வயசிலே ஸ்கூலில் படித்துக் கொண்டிருந்தபொழுது, ராமாயணம், பாரதம், அரிச்சந்திரோபாக்கியானம், நளோபாக்கியானம் என்று பலவற்றிலிருந்தும் சொல்லிக் கொடுப்பார்கள். ஆனால் அது இப்போ ரொம்ப குறைஞ்சு போய்விட்டது. நமது தர்மம் பற்றி நமது எஜுகேஷனல் சிஸ்டத்திலே சேர்க்கப்படணும்.

வீட்டிலும் வேலை பார்த்துக் கொண்டு, ஆபீசுக்கும் போகிற இன்றைய பெண்கள், பூஜை, புனஸ்காரம் போன்றவற்றுக்குப் போதிய அளவு நேரம் செலுத்த முடிவதில்லையே!

**சுவாமிகள்:** தினமும் காலையில் ஒரு பத்து நிமிஷம் ஒதுக்க முடியாதா? காலையில் முடியாவிட்டால், சாயங்காலம் ஒதுக்குங்கள். பகவான் நாமத்தைச்





பாரத தேசம் முழுக்க யாத்திரை மேற்கொண்டிருக்கும் ஜகத்குரு சிருங்கேரி சாரதா பீடாதிபதி ஸ்ரீ பாரதீ தீர்த்த மஹா ஸ்வாமிகள், யாத்திரையின் நிறைவாகச் சென்னைக்கு எழுந்தருளியிருக்கிறார். ஸ்வாமிகள் கல்கிக்கு அளித்த சிறப்புப் பேட்டி:

சொல்லுங்கள். தினமும் ராமநாமத்தை 108 தடவை சொல்லுங்கள் அது போதும்.

*இன்றைக்கு விஸ்வரூபம் எடுத்துள்ள சாடலைட் டி.வி. போன்ற சமாசாரங்களால் நமது பாரம்பரியத்துக்கு, கலாசாரத்துக்கு ஏதேனும் பாதிப்பு வருமா?*

**ஸ்வாமிகள்:** டி.வி. இப்போது குழந்தைகளைக் கெடுக்கக் கூடிய லைனில் இருக்கிறது. அது அப்படி இருக்கக் கூடாது. அந்த மீடியத்தை, நம் குழந்தைகளைச் சரியானபடி வளர்க்கும் அளவுக்கு மாற்ற வேண்டும். அதாவது நெகடிவ் ஆகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிற அதே மீடியத்தை பாஸிடிவ் ஆகச் செயல்படுத்த நடவடிக்கை எடுக்கணும்.

*இன்று மதத்தை வைத்து அரசியல் நடத்தி வருகிறார்களே, அரசியல் தலைவர்கள்– இது எந்த அளவுக்குச் சரி?*

**ஸ்வாமிகள்:** வாழ்க்கையினுடைய அடிப்படை கொள்கைகள், அவை அரசியல்வாதிகளுக்கும் உரியவைதான். இதை உணர்ந்து செயல்படாமலிருப்பதால்தான் பிரச்னையே வருகிறது.

*எல்லா மதங்களும் மத நல்லிணக்கத்தையே எடுத்துச் சொன்னாலும், மதத்தின் பெயரால் நிகழும் சம்பவங்கள் அப்படி இல்லையே! என்ன காரணம்?*

**ஸ்வாமிகள்:** மதங்களைப் பற்றி மக்களுக்கு முழுமையான அறிவு இல்லாததுதான் இதற்குக் காரணம். ஆகவேதான், முட்டாள்தனமாய்ச் செயல்பட்டு, மத நல்லிணக்கத்துக்குக் குந்தகம் விளைவிக்கிறார்கள்.

*அரசியலாக்கப்பட்டுவிட்ட அயோத்தி பிரச்னைக்கு, நிரந்தர தீர்வுதான் என்ன?*

**ஸ்வாமிகள்:** அரசியல் சாயம் பூசாமல், இரு மதத்தினருக்கும் இடையில் பிரச்னையை விட்டு விடுங்கள். பேசித் தீர்வு காணலாம்.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**
படம்: **யோகா.**

## கலக்கப் போகும் குமரிப் பக்கங்கள்!

கன்னியாகுமரி வாசகர்களின் போஸ்ட் கார்ட் 'கிரியேஷன்கள்' கல்கியின் குமரிப் பக்கங்களில் இடம் பெறும்.

- இப்போதைய குமரி மாவட்ட வாசகர்கள் எழுதலாம்.
- ஜோக், கதை, துணுக்கு, சம்பவம், மாணவர் செய்தி– எதுவாயினும் போஸ்ட் கார்டுக்குள் அடக்கி விடுங்கள்.
- தேர்ந்தெடுக்கப்படும் ஐட்டங்கள் பிரத்யேகப் பக்கங்களில் இடம்பெற்றுச் சன்மானம் பெறும்.
- அதிகபட்சமாக நான்கு வாரங்கள் வெளியாகும் குமரி மாவட்டப் பக்கங்களில் இடம் பிடிக்கும் மிகச் சிறந்த துணுக்குக்கு ஒரு சிறப்புப் பரிசும் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முகவரிப் பகுதியில் 'கலக்கலான குமரி' என்று குறிப்பிட்டு போஸ்டு கார்டுகளை அனுப்புங்கள்.

— ஆசிரியர்

மிருதங்க வித்துவான் வீட்டில் கடிகாரம் இல்லை! அவர் வீட்டுக்கு வந்த உறவினரும் கடிகாரம் இல்லாமல்தான் வந்தார். தங்கியிருந்த உறவினர் 'இப்போ மணி என்ன இருக்கும்?' என்று வித்துவானைக் கேட்டார்! உடனே வித்துவான், தன் மிருதங்கத்தை எடுத்து, 'டம்...டம்' என்று வாசிக்க ஆரம்பித்தார்! 'மணி கேட்டா... நீங்க மிருதங்கம் வாசிக்கறீங்களே...!' என்றார் விருந்தாளி!... 'பாருங்க! இப்ப மணி தெரியும்!' என்று சொல்லிக் கொண்டே அவர் விடாமல் மிருதங்கத்தை வாசிக்க... பக்கத்து வீட்டிலிருந்து சத்தம் வந்தது, "விடியற்காலம் மூணுமணிக்கே தட்டறதுக்கு ஆரம்பிச்சாச்சா?"

— உடுமலை எஸ். பொன்னுசாமி.



# பராமரிப்பின்றி வாடுகிற கூந்தலுக்கு அழகுண்டோ?

உங்கள் கூந்தல் பராமரிப்பின்றி வாடுகிறதா என்பதைக் கண்டறிய இதோ ஒரு சுலபமான வழி. குளித்த பிறகு தலை வாரும்போது சிக்குகள் இருக்கிறதா என்று பாருங்கள். சிக்குகள் இருந்தால் கூந்தல் வலுவற்றும், பராமரிப்பின்றி வாடுவதாகவும் அர்த்தம்.

இந்நிலை கூந்தலை சோப்பாலும், சாதாரண ஷாம்பூக்களாலும், மற்ற சாதாரண பொருட்களாலும் கழுவுவதால் கூந்தலின் இயற்கை நலன்களும், ஈரப்பதமும் வற்றிப்போய் ஏற்படுகிறது. மேலும் கூந்தலை சாதாரண பொருட்களால் கழுவும்போது அழுத்தித் தேய்ப்பதால் அது சேதமடையவும் கூடும்.

எனவே சிக்குகளை சீப்பால் சீவி எடுக்க முயற்சிக்காதீர்கள். வலுவற்ற முடிகள் அதனால் உடைந்து போகக்கூடும். அதற்குப்பதில் கூந்தலுக்கு அளியுங்கள்:



கோலின்
ஃபிலிம் ஹேர் ஸ்டைலிஸ்ட்

## புதிய ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனர்
## கூந்தலுக்கு விசேஷ ஊட்டு

புதிய ஸன்ஸில்க் ஆஃப்டர் வாஷ் கண்டிஷனர், குளித்த பிறகு கூந்தலுக்கு பராமரிப்பு தேவைப் படும்போது செயல்புரியும். சிக்குகளை இதமாய் அகற்றி, கூந்தல் சேதமடையாமல் பாதுகாத்து-மென்மையாகவும், அழகாகவும் ஆக்கும்.



குளித்த பிறகு கூந்தலிலுள்ள அதிகப்படி நீரை பிழியவும். தேவையான அளவு ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனர் எடுத்து கூந்தல் முழுவதும் தடவவும். நுரைவராது



இரண்டு நிமிடம் நியூட்ராசேர் நலன்களை கூந்தல் எடுக்க விடுங்கள்.



பிறகு அலசுங்கள். நன்கு பராமரிப்பு பெற்ற கூந்தல் தொட்டால் வழுவழுப்பாக இருக்கும். டவலால் தலையை துவட்டி லேசாக ஈரத்தில் சீவவும். இப்போது முடி உடைந்துவிடும் என்கிற கவலை வேண்டாம். கூந்தல் சிக்குகளற்றும், வலுவாகவும், நல்ல பராமரிப்பு பெற்றும் இருக்கும்.



பிறகு வழக்கம்போல் கூந்தலை காய வைக்கவும். ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனரின் நலன்கள் கழுவிய பின்னரும் நீண்ட நேரம் கூந்தலில் தங்கும். அதனால் கூந்தல் சிக்குகளற்றும், வலுவாகவும் இருக்கும்.

இதமாய் தழுவும் மென்மை. இதுவரைக் கண்டிராத அழகுடன் திகழும் கூந்தலைப் பெற நேரம் வந்து விட்டது.

ரூ. 2/- விலையுள்ள சிக்கனமான சாஷேயைப் பயன்படுத்திப் பாருங்கள்.

# 6

சேது வேலைக்குப் புறப்பட்ட போது ஏற்கெனவே நீலா எழுந்து விட்டிருந்தாள். ஏதோ மும்முரமாக எழுதிக் கொண்டிருந்தாள்.

"என்ன இது நீலா, காலையில் ஆறரை மணிக்கு இவ்வளவு சீரியசா எழுதறே?"

"சேது நான் இன்னக்கி பிரபு இருக்கும் ஆராய்ச்சிக் கூடத்துக்குப் போய் இன்னும் சில விவரங்கள் சேகரிக்கணும்... அதுக்குத்தான் இதுவரை என்னென்ன இருக்குன்னு ஒழுங்குபடுத்தினேன்."

"வழக்கமான நேரத்துக்கு வந்துடுவியா?"

"அநேகமாக வந்துடுவேன்."

"எனக்கு ஆறு மணிக்கு முன்னால் வர முடியாது நீலு."

"காலையிலேயே என்ன 'நீலு' போடறீங்க?"

"நேற்று மாலை வெளியே போனது, பார்க்கில் பேசினது எல்லாமே மனசுக்கு இதமா இருந்தது நீலு... அதான் நீலுன்னேன் நீலு." சேது சிரித்தான். அதிருக்கட்டும். மூர்த்தி ஏன் உன்னைப் பார்க்க காத்திட்டு இருந்தான்?"

"ஒரு முக்கிய விஷயம் சொன்னான். அதுக்காகத்தான் நான் பிரபுவின் ரிசர்ச் பில்டிங்கிற்குப் போகணும் இன்னக்கி."

"அப்படி என்ன முக்கிய விஷயம்?"

"சொல்லியே ஆகணுமா?"

"சொன்னா நான் என்ன பேப்பரிலயா போடப் போறேன்?" சேது பலமாகச் சிரித்தான். நீலாவும் சிரித்து விட்டாள்.

"இந்த விவகாரத்திலே அமைச்சர் ரங்கதுரையின் பேரும் அடிபடுது... அவர் டாக்டர்கள் பாலு, சாலமன் இரண்டு பேருடன் தொடர்பு கொண்டு ஏதோ திட்டம் உருவாக்கறார்னு மூர்த்தி சொன்னான்."

"அப்ப ரங்கதுரை ஆபீசுக்குத்தானே நீ போகணும்?"

"இல்லை! ரங்கதுரையை விட பாலு, சாலமன் இரண்டு பேரிடமிருந்து விவரம் சீக்கிரம் வெளியே வரும்னு எனக்குத் தோணுது."

"நீ கவனமாக இருக்கணும் நீலா..." கருத்துடன் சொன்ன சேதுவை நீலா அன்போடு பார்த்தாள்.

"நிச்சயம், சேது... நம்முடைய கனவுகள் இன்னும் நினைவாக வேண்டுமே" என்றாள்.

"நானும் சீக்கிரம் புறப்படணும்" என்று சேது தயாரானான்.

சேது அவனுடைய ஆபீசுக்கு வந்த போது அவனுக்கு முக்கிய

மாண்புமிகு

# கம்சன்

செய்தி காத்திருந்தது. தாளை எடுத்துப் படித்தான்.

'இன்று 200 மூட்டைகள் வருகின்றன. அதில் பூச்சிக் கொல்லி இருக்கிறது. கவனமாக அவற்றை எண்ணி, மற்ற மூட்டைகளுடன் கலக்காமல், தண்ணீர் படாத இடத்தில் வைக்கவும்... இன்னும் மூன்று வாரங்களில் ஏற்பாடுகள் பற்றி இதர அறிவிப்பு வரும்' என்ற செய்தியை சேதுவின் ஹெட் ஆபீஸிலிருந்து சீனியர் எக்சிகூடிவ் அனுப்பியிருந்தார்.

சேது வேலை செய்த இடம் ஒரு பெரிய கம்பெனியின் கிடங்கு. அந்தக் கம்பெனி விவசாயத்துக்கான உரம், பூச்சிக்கொல்லி மருந்துகள் ஆகியவைகளை லட்சக்கணக்கான ரூபாய் அளவில் வாங்கிச் சிறு கடைகளுக்கு விநியோகிக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்தது. சென்னையின் வெளிப்புறத்தில் 'ரெட் ஹில்ஸ்' போகும் வழியில் பழைய கட்டடத்தைக் கொஞ்சம் சீர்படுத்தி, அதில் மூட்டை மூட்டையாக அடுக்கி வைத்திருந்தனர். சேதுவின் வேலை கடினம் இல்லையானாலும், கவனம் அதிகம் வைக்க வேண்டிய

**வாசன்**

வேலை. என்னென்ன உர மூட்டைகள், பூச்சிக்கொல்லி மருந்துகள் வருகின்றன; எவ்வளவு என்பதையெல்லாம் கணக்கெடுத்து, கம்ப்யூட்டரில் 'இன்வென்டரி' செய்ய வேண்டும். அன்றாடம் கடைகளுக்கு அனுப்பப்படும் மூட்டைகள் கணக்கையும் பார்த்து, தினமும் மாலையில் கணக்கைச் சரிசெய்ய வேண்டும். தலைமை அலுவலகத்திலிருந்து கேள்விகள் வந்தால் கணக்குக் கொடுக்கத் தயாராக இருக்க வேண்டும். அவனுக்கு உதவி செய்ய ஆறு ஆட்கள் இருந்தனர்; கம்பெனிக்கு மூன்று லாரிகள். மற்றபடி தேவைக்கேற்ப ஒவ்வொரு நாளும் தினசரி கூலிக்கு ஆட்களை நியமிப்பதும் சேதுவின் வேலைதான்.

அவனுக்கு அங்கு வேலை செய்வதில் பிடிக்காதவை இரண்டு விஷயங்கள். ஒன்று, மாதம் இரண்டு முறையாவது சில உர மூட்டைகளோ, பூச்சிக்கொல்லி மருந்துகளோ காணாமல் போவது. மற்றது, மூட்டைகள் வந்து இறங்கும் போதும், லாரிகளில் ஏறும் போதும் சிலவற்றிலிருந்து வாடையும், மிகச் சன்னமான தூசும் வரும். சேதுவும் அங்கு வேலை - செய்யும் மற்றவர்களும் அந்தத் தூசை சுவாசிக்காமல் இருக்கவே முடியாது. மெல்லிய துணியால் மூக்கை, வாயை மூடிக்



கொண்டு மூட்டையை அடுக்குவோர் போல சேது மூடிக் கொள்வதுமில்லை. தூரத்தில் நின்று வேலையைக் கண்காணித்தாலும் தூசு அவனை நாடி வருவது போல இருக்கும். வரும். தடுக்க முடியாது.

சேது அடிக்கடி நினைப்பதுண்டு. 'இந்த அளவு இதுபோன்ற 'கெமிக்கல்ஸ்' தூசு எல்லாம் உள்ளே போகிறதே... உடலை எந்த விதத்தில் பாதிக்குமோ? புற்றுநோய் போன்ற கொடும் நோய்கள் வருவதற்குக் கூட வாய்ப்பு ஏற்படும் என்று நீலா அடிக்கடி சொல்கிறாளே?' என்று நினைப்பான். இந்த வேலையில் இன்னும் ஒரு வருடமாவது இருந்தால், ஐந்து ஆண்டு பயிற்சியை வைத்துக் கொண்டு வேறு வேலை தேடலாம் என்ற எண்ணம்தான் அவனைத் தொடர்ந்து வேலையில் இருக்கச் செய்தது. அங்கு வேலை செய்யும் மற்ற ஆட்கள் எதைப் பற்றியும் கவலையில்லாமல் மூட்டை தூக்கிய கையோடு பன், ரொட்டி சாப்பிட்டு, டீ குடிப்பதையும் தினமும் சேது பார்க்கிறான். வயிற்றைக் கழுவ வேலை செய்யும் மக்களுக்கு, நாளைக்கு வரும் புற்றுநோயை விட இன்றைய பசியின் கொடுமை அதிகம் என்பது அவனுக்குப் புரிந்தது. ஆப்பிரிக்கா,

இந்தியா போன்ற நாடுகளில் இது சாதாரணமான நிலையாயிற்றே என்று நினைத்தபோது சேது வருந்தினான்.

"இன்னிக்கு ஏதாச்சும் பெரிய ஆர்டர் வருதா சார்?" என்று சேதுவின் உதவியாள் கேட்டான்.

"இருநூறு மூட்டை பூச்சிக்கொல்லி மருந்து வருமாம்... எப்பவும் அனுப்பறாங்களே 'மேலதயான்' என்கிற பூச்சிக்கொல்லி அதுதான் இன்னிக்கும் வருது. அதைத் தண்ணீர் படாமல் உலர்ந்த இடத்தில் அடுக்க ஏற்பாடு செய்யுங்கள்" என்று சேது சொன்னதும் உதவியாள் போய் விட்டான்.

தலைமை அலுவலகத்திலிருந்து 'மேலதயான்' பூச்சிக் கொல்லியைத் தண்ணீர் படாமல் வையுங்கள் என்று செய்தி வந்ததற்குக் காரணம் இருக்க வேண்டும். சேதுவுக்கு ஏற்கெனவே சில கடைகளிலிருந்து புகார் வந்திருந்தது. அவர்கள் விற்ற 'மேலதயான்' வேலை செய்யவில்லை என்று விவசாயிகள் சொன்னதாக சேது அறிந்தான். ஏன் என்பது சேதுவுக்கு அப்போது புரியவில்லை. தலைமை அலுவலகத்தைக் கேட்ட போது அவர்களும் அப்போது ஒன்றும் சொல்லாமல், இப்போது 'தண்ணீரில் மருந்து கலந்தால் சில நேரங்களில் அப்படி ஆகி விடலாம்' என்று சொல்கிறார்கள்.

'மேலதயான்' என்று சேது நினைத்த போது நீலாவின் 'இன்வெஸ்டிகேடிவ் ரிப்போர்ட்டிங்' சட்டென்று நினைவு வந்தது. அவள் கூட 'மேலதயான்' பற்றித்தானே இப்போது செய்தி சேகரித்து வருகிறாள் அவளுக்கு 'மேலதயான்' பற்றித் தெரிந்திருக்க வேண்டுமே? அன்று மாலை வீட்டிற்குப் போனதும் அவளிடம் நிச்சயம் அது பற்றிப் பேச வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு மேலே வேலையைக் கவனித்தான் சேது.

நீலா ஆபீசுக்குப் போன் செய்து மூர்த்தியிடம் பேசினாள். தான் நேராக டாக்டர் பிரபுவின் ஆராய்ச்சிக் கூடம் போவதாயும் பிற்பகல் ஆபீசுக்கு வருவதாயும் சொன்னாள்.

"என்னய்யா சர்வர், சாம்பார், ரசம் இதில் எல்லாம் தாளிச்ச மாதிரியே தெரியலையே..?"
"அதையும் சேர்த்து பில்லில் தாளிச்சிடுவோம் சார்!"

- எம். அசோக்ராஜா



மூர்த்தி "நானும் வருகிறேனே" என்ற போது அவள் "இப்போது தேவையில்லை மூர்த்தி. அடுத்த முறை பார்த்துக் கொள்ளலாம்" என்று சொல்லிவிட்டாள். மூர்த்தி போனை வைத்துவிட்டு தன்னறைக்குத் திரும்பியதும் ஆசிரியர் செங்கோடன் அங்கு வந்து நின்றார்.

"என்ன, மூர்த்தி... நீலா எங்கே?" என்றார்.

"ஆராய்ச்சிக் கூடத்துக்குப் போயிருக்காங்க" என்றான். நீலாவை 'நீ, போ, வா' என்று நேரடியாய்ப் பேசும் போது சொன்னாலும், ஆபீஸில் மற்றவர்களிடம் அவளைப் பற்றிப் பேசும் போது 'அவங்க, போங்க' என்றவாறுதான் மூர்த்தி பேசுவான்.

"அப்படியா? சரி, நீ இதுவரை எடுத்த படங்களை எப்ப பார்க்கலாம்?" என்றார் செங்கோடன்.

"இன்னும் ஒரு மணி நேரத்துலே எடுத்து வரட்டுமா?" என்றான் மூர்த்தி. "சரி" என்று சொல்லிவிட்டு செங்கோடன் தன்னறைக்குப் போய், தொலைபேசியை எடுத்து ஓர் எண்ணைச் சுழற்றினார்.

"நீலா நேராக ஆராய்ச்சிக் கூடத்துக்குப் போயிருக்கா. அவள் கூட இன்னக்கி மூர்த்தி இல்லை" என்று சொன்னார்.

அடுத்த பக்கத்தில் ஒலித்த குரல் "எல்லாம் நானே கவனிச்சிக்கிறேன் சார்" என்றது. போன் வைக்கப்பட்டது.

செங்கோடன் பெருமூச்சு ஒன்றை விட்டார். மேசையில் இருந்த செய்திகளைப் பரிசீலிக்க ஆரம்பித்தார்.

நீலா ஆராய்ச்சிக் கூடத்துக்கு வந்த போது டாக்டர் பிரபு இன்னும் வரவில்லை என்று தெரிந்தது.

"அவருக்கு உடம்பு சரியில்லையாம்... ஜுரம், உடல்வலி என்று வீட்டில் தங்கி விட்டார்" என்று பானு சொன்னாள். பிரபுவின் அறை பூட்டப்பட்டிருந்தது.

"தேங்க் யூ... ஆராய்ச்சி அறை வரைக்கும் நான் போய் வரலாமா?" என்றாள் நீலா.

"தாராளமாய்ப் போகலாம். அங்கே டாக்டர்கள் பாலு, சாலமன் இரண்டு பேருமே இருக்காங்க உங்களுக்கு விவரமாச் சொல்வாங்க" என்று பானு உற்சாகமாகச் சொன்னதை நீலா வரவேற்றாள்.

மறுபடியும் பானுவுக்கு நன்றி சொல்லிவிட்டு ஆராய்ச்சி அறையை நோக்கி நடந்தாள். நீண்ட பாதையில் நடந்து வலது பக்கம் திரும்ப வேண்டும். பாதையின் கோடிக்கு வந்ததும் நீலாவுக்குப் பழக்கமான இரண்டு குரல்கள் ஒலித்தன. நீலா நின்று விட்டாள்.

"ஏய் பாலு... இன்னக்கி பிரபு வரலை.

கேட்டறியுங்கள் உங்கள் புதிய

# ஜாதகபலன் ஜோதிட போன்

சுவாமி யோகானந்த் போன்

வேலை? தனம்?
உறவுகள்?
மகப் பேறு?
சட்டப் பிரச்சனை?

1008 மஹா மண்டலேஷ்வர் சுவாமி யோகானந்தஜி மகராஜ் இடமிருந்து போனில் உங்களுடைய எல்லா பிரச்சனைக்கும் தீர்வு கேட்டறியுங்கள்.

**001 122 221 1727**

## இந்த வாரபலன்கள்

**0011 222 222 0+☐☐**

| 31 | 32 | 33 | 34 | 35 | 36 |
|---|---|---|---|---|---|
| மேஷம் | ரிஷபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி |

| 37 | 38 | 39 | 40 | 41 | 42 |
|---|---|---|---|---|---|
| துலாம் | விருச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் |

## பொருத்தம்

உங்கள் துணையும் நீங்களும் ஒருவருக்கொருவர் பொருத்தமானவர்களா? என்று தெரிந்து கொள்ளுங்கள்

☎ **0011 222 222 043**

## பட்சி சாஸ்திரம்

ஒரு பண்டைய ஆருட முறை உங்கள் ஜாதகப்படி கேள்விகளுக்குப் பதில் சொல்கிறது.

☎ **0011 222 222 025**

இது சர்வதேச போன் கால். அங்கீகரிக்கப்பட்ட கட்டணங்கள். எம் & ஏ. யு.எஸ்.ஏ.

---

சத்யம் சீலம் நாணயம் தர்மம் = இதுதான் சசிநாத் சத்யம் சீலம் நாணயம் தர்மம் = இதுதான் சசிநாத்

## திருமாங்கல்ய திருமண திட்டம்

உங்கள் பெண், ஆண் குழந்தைகளை படிக்க வைக்க திருமணம் முடிக்க கவலை கொள்ள வேண்டாம்.

இதோ ஒரு அருமையான திட்டம்!

**ஒரே ஒரு முறை மட்டும்**

*சிறிய முதலீடு! பெரிய வருமானம்!!*

| வயது | தாங்கள் செலுத்தும் தொகை | டெபாசிட் செய்யும் மாதங்கள் | தங்களுக்கு கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| 1 வயது | ரூ.1,000/- | 240 | 64,000 |
| 1 வயது | ரூ.2,500/- | 240 | 1,60,000 |
| 1 வயது | ரூ.5,000/- | 240 | 3,20,000 |
| 5 வயது | ரூ.15,000/- | 180 | 3,60,000 |
| 10 வயது | ரூ.45,000/- | 120 | 3,60,000 |

SOORYA ADVERTISINGS

# டெபாசிட் சேகரிப்பு விழா

உடனடி வட்டி!

ரூ.10,000/-மும் அதற்கு மேலும் 1 ஆண்டுக்கு டெப்பாசிட் செய்து 1 ஆண்டு வட்டி உடனடியாக பெறுவீர். **18% P.A.**

இன்று உங்கள் பணத்தை முதலீடு செய்து **இரு மடங்காக** 40 மாதங்களில் பெறுவீர்

ரூ.5000/-மும் அதற்கு மேலும் 1 ஆண்டுக்கும் அதற்கு மேலும் டெப்பாசிட் செய்து 6 மாத வட்டி உடனடியாக ரொக்கமாக பெறுவீர். **20% P.A.**

**ரூ.50,000/-** 60 மாதங்கள் முடிந்தவுடன் **1,50,000/-** பெறுங்கள் போனஸ் தனி

## சசிநாத் சாஸ்வத நிதி லிமிடெட்

H. O. 36, ரங்கநாதன் தெரு, சென்னை - 17 PH: 4348233, 4346786
B.O. 35, M.C. ரோடு, சென்னை - 21, 301, N.M. ரோடு, ஆவடி, சென்னை - 54.
34-C, ரயில்வே ரோடு, காஞ்சிபுரம் - 631 501. 58, கடப்பா டிரங்க் ரோடு, திருத்தணி - 631 209, 38, ஆற்காடு சாலை, வேலூர் - 632 004.
பாண்டி கிளை : 161, S.V. பட்டேல் தெரு, பாண்டி - 605 001.
லேவாதேவிகள் பங்குதாரர்களுக்கு மட்டும் செல்லாம் விதிமுறை

**மக்கள் சேவையில் 17 ஆம் ஆண்டு**

சசிநாத்துடன் இணைவோம்! சௌக்கியமாக வாழ்வோம்

சத்யம் சீலம் நாணயம் தர்மம் = இதுதான் சசிநாத் சத்யம் சீலம் நாணயம் தர்மம் = இதுதான் சசிநாத்



''முருங்கைக்காய் சாப்பிட்டா எய்ட்ஸ் வரும்னு அடுத்த வீட்டு முனுசாமியிடம் சொல்லிக்கிட்டிருந்தீங்களே, ஏன்?''

''நம் வீட்டு முருங்கை மரத்தில் அடிக்கடி காய்கள் காணாமல் போவதற்கு அவன்தான் காரணம்னு சந்தேகம்!''

- உ. ராஜாஜி

நீயும் நானும் கொஞ்சம் 'லைப்ரரி ரிசர்ச்' செய்யலாமா?"

"சாலமன், இந்த ரங்கதுரை விவகாரம் எனக்கு நிறைய பயத்தை உண்டாக்கி யிருக்கு... நீயும் நானும் ஏதோ பெரிய சிக்க லிலே மாட்டப் போறோம்னு நினைக் கிறேன்."

"பாலு, ரங்கதுரையை எப்படி சரிகட்டற துன்னு நான் பார்த்துக்கிறேன். எனக்குத் துணையா மட்டும் நீ இருந்தா போதும்."

நீலாவுக்கு இந்தப் பேச்சு போய்க் கொண் டிருந்த திசை விறுவிறுப்பாக இருந்தது. தான் தெரிந்து கொள்ள வேண்டிய விவரம் இப் படி தானாகத் தன்னை நோக்கி வருவது தன் னுடைய நல்ல காலம் என்று நினைத்தான்.

சில நிமிடங்கள் கழித்து அவர்கள் இருந்த ஆராய்ச்சி அறைக்குள் நுழைந்தான்.

அவனை அந்த நேரத்தில் எதிர்பார்க்காத பாலுவும் சாலமனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

"ஹலோ டாக்டர்ஸ் பாலு, சாலமன்" என்று உற்சாகமாகக் கூவிய நீலாவுக்கு அவர் களால் பதில் சொல்லாமலிருக்க முடிய வில்லை.

"என்னங்க, நிருபர் நீலா.. நீங்களும் இங்கே ஆராய்ச்சி செய்ய வர்றாப்போல தினமும் வர்றீங்க?" சாலமன் கிண்டலாகப் பேசினான்.

"அப்படியும் சொல்லலாம்... நான் செய் வது விஞ்ஞான ஆராய்ச்சி இல்லை... விஞ் ஞானத்தைப் பற்றின ஆராய்ச்சி" என்று நீலா சொன்னதும் சாலமன் கிண்டலை மறந்தான். 'நீலா புத்திசாலியான ரிப்போர்ட்டர்' என்று தான் கேள்விப்பட்டதை இப்போது நேரடி யாகப் புரிந்து கொண்டான்.

"இன்னிக்கும் எங்களைப் பேட்டி காண வந்தீங்களா?" என்றான் பாலு தயக்கத்துடன்.

"உங்கள் உதவியை நாடி வந்தேன்னு சொன்னா சரியாயிருக்கும்" என்றான், நீலா.

"என்ன செய்ய வேண்டும்?" சாலமன் புருவத்தை உயர்த்தினான்.

"மேலதயான்' என்கிற பூச்சிக்கொல்லி மருந்தைப் பற்றி மேலே சொல்ல முடியுமா?"

"அதை டாக்டர் பிரபுவிடம் கேளுங் கன்னு நான் சொன்னேனே!" சாலமன் பிடி கொடுக்காமல் பேசினான்.

"ஆனால் டாக்டர் பிரபு இன்னைக்கி வர வில்லை. இன்னும் சில நாட்கள் வருவாரோ இல்லையோ அவருக்கு 'ஃப்ளு' என்று பாலு சொன்னாங்க... எனக்கு இந்தக் கட்டுரையை முடிக்கணும்... டாக்டர் பிரபு இல்லாத போது நீங்க இரண்டு பேருந்தானே இங்கே பிராஜக்ட் டைரக்டர்கள் போல... உங்களுக் குத் தெரியாத விவரம் யாருக்குத் தெரியப் போறது?"

பாலுவின் முகத்தில் பெருமையின் களை கட்டியது. சாலமன் முகவாயை ஒருமுறை தடவிக் கொண்டான்.

"அதோ பார்த்தீங்களா?" என்று மேசை மேல் இருந்த எலிக் கூண்டுகளைக் காட்டி விட்டு, "அந்தக் கூண்டுகளை இரண்டாகப் பிரித்து, ஆண் எலி, பெண் எலி என்று இரண்டு பக்கங்களில் தனித்தனியாக வைத்து ஆராய்ச்சி நடக்கிறது" என்றான் பாலு.

"ஆண் எலிகளுக்கு 'மேலதயான்' தினசரி ஆகாரத்தில் ஓரளவு கொடுக்கப்படுகிறது... இன்னொரு கூண்டிலிருக்கும் ஆண் எலி களுக்கு வெறும் ஆகாரம்தான். ஆண் எலி களுக்கு உயிரணுக்கள் குறைகின்றனவா என் பதை டாக்டர் பிரபு ஆராய்ச்சி செய்கிறார்."

"மிகவும் சுவாரசியமான ஆராய்ச்சி" என் றான் நீலா. மேலும் விவரங்கள் அதிகமாக வரவில்லை என்றாலும் சிறிது நேரம் பாலு, சாலமன் இருவரிடமும் பேசி விட்டு, அவன் அங்கிருந்து புறப்பட்டான். கட்டடத்தை விட்டு வெளியே வந்த நீலா ஆட்டோவுக் காகக் காத்திருந்தான். தூரத்தில் ஒரு மரத்தடி யில் நின்று சிகரெட் பிடித்துக் கொண்டிருந்த ஓர் ஆள் நீலாவையே கவனித்துக் கொண் டிருந்தான். அது செங்கோடன் அனுப்பிய ஆள் என்பது நீலாவுக்குத் தெரியாது.

நீலா பார்வையிலிருந்து மறைந்ததும் சாலமன் பாலுவிடம் தணிந்த குரலில் பேசி னான் : "பாலு, இந்த நீலா நம்ம இரண்டு பேரையும் கவனிக்கிறானோ அப்படின்னு தோணுது!"

"ஏன், சாலமன்... இந்த நீலாவைப் பத்தி ரங்கதுரை கிட்ட சொல்லி வைச்சா எப்படி?" என்றான் பாலு. சாலமன் சிறிது யோசித்து விட்டுத் தலையை ஆட்டினான். அவன் மூளை வழக்கத்தை விட அதிகமாகவே வேலை செய்தது.

(தொடரும்)




# டெபாசிட் திட்டங்கள்

| ஃபிக்சட் டெபாசிட் | | |
|---|---|---|
| காலம் | வட்டி விகிதம் (ஆண்டிற்கு) | குறைந்த பட்ச டெபாசிட் தொகை |
| ஓர் ஆண்டு | 24% | ரூ.10,000/- |

ஊக்கத் தொகை 1%

| க்யூமுலேடிவ் டெபாசிட் | | | | |
|---|---|---|---|---|
| காலம் | டெபாசிட் தொகை | முதிர்வுத் தொகை | வருடாந்தர வட்டி | ஊக்கத் தொகை |
| 13 மாதம் | ரூ.10,000/- | ரூ.13,000/- | 27.70% | 1.5% |
| 25 மாதம் | ரூ.10,000/- | ரூ.16,000/- | 28.80% | 3.0% |
| 37 மாதம் | ரூ.15,000/- | ரூ.30,000/- | 32.4% | 4.5% |

## ஈஸ்வரி பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.25,000
இரு மடங்காகிறது
37 மாதங்களில்
ரூ.50,000/-
ஊக்கப்பரிசு
4 கிராம் தங்கக்காசு



## திருமலா பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.50,000
மும் மடங்காகிறது
60 மாதங்களில்
ரூ.1,50,000/-
ஊக்கப்பரிசு
8 கிராம் தங்கக்காசு

ESWARI

**ஈஸ்வரி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்**

(ஈஸ்வரி குரூப் நிறுவனங்கள்)

தலைமை & நிர்வாக அலுவலகம்: 4, எல்டாம்ஸ் ரோடு, முதல் மாடி, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018. தொலைபேசி: 455349, 459557, 457583.

கிளைகள் : நெ. 13, ரட்டன் பஜார், பாரிமுனை, சென்னை-3. போன்: 560767, 49, வடக்கு உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-17. போன்: 8259661, 69, முதல் மாடி, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, புரசைவாக்கம், சென்னை-7. போன்: 5324937, 5324940, நெ. 72, ஜி.எஸ்.டி. ரோடு, குரோம்பேட்டை, சென்னை-44. போன்: 405845, நெ. 11, பாரதி சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-5. போன்: 841187, நெ. 19/6, 4வது மெயின் ரோடு, முதல் மாடி, நங்கநல்லூர், சென்னை-61. போன்: 2345891, நெ. 13, ஆற்காடு சாலை, சாலிக்கிராமம், சென்னை-93. போன்: 428650, நெ. 25, முதல் மாடி, ஜவஹர்லால் நேரு தெரு, பாண்டிச்சேரி-1. போன்: 31830.

கோயம்புத்தூர், மதுரை, திருச்சி, சென்னை (அண்ணா நகர், மைலாப்பூர் மற்றும் அடையார்) கிளைகள் விரைவில் திறக்கப்படவுள்ளது.

எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்

**உங்கள் வளர்ச்சி ஈஸ்வரியுடன் வளரட்டும்**

LOTUS/95

# தமயந்தி

சுட்டு விரல் நீட்டி கேசவன் கேட்டான். மனசு நடுங்க வைக்கும் கேள்வி. நெற்றி ஒருமுறை சுருங்கி பிறகு மடங்கி எழும்பிற்று அவனுக்கு. சங்கரி மனசுக்குள் ஒடிந்தாள். முகத்தை எங்கே யாவது ஒளித்து வைக்கிற மாதிரி கேள்வி. எங்கேயாவது மனசை தொலைத்து விட்டால் பரவா யில்லை என்கிற தினுசில். கடவுளே!

"உனக்கென்னடி காதலைப் பத்தி தெரியும்? மூதேவி! மனசு பத்தித் தெரியுமா உனக்கு?"

பிரச்னை ஒன்றுமில்லை. கேசவனின் தங்கை காதலிக்கிறாள். ரேணுகாவுக்கு அப்படி என்ன வயசிருக்கும்? போன மாசம் ப்ளஸ் டு சேர்ந்த பெண். ரோட்டில் ஒருவனுக்கு காதல் கடிதம் நீட்டி அவன் கொடுத்த தாளை கையில் வாங்கினதை கண்ணால் பார்த்த பிறகு எப்படி கண்டிக் காமல் இருக்க முடியும்... எப்படி? அவன் நல்லவனா? அப்படியே அவன் நல்லவனாக இருக்கும் பட்சம் இதே கேசவனும் மாமியும் ஒத்துக் கொள்வார்களா? ஒத்துக் கொள்ளவில்லை என்றால் ரேணுகா தமிழ் சினிமா பாதிப்பில் தூக்கில் தொங்கி....

படபடத்தது....

இந்த படபடப்புதான் - இதேதான்... இதா? சங்கரி தனக்குத் தானே கேட்டுக் கொண்டாள். இதா? இதுவும்.... அப்படியென்றால் வேறென்ன? சுரேஷ்... அவனும்....

சட்டென்று மனசில் நினைவு மொட்டு விட்டது. ரேணுகாவை விட நாலைந்து வயது கூட இருக்கும். பக்கத்து தெரு சுரேஷ் மனசை ஈர்த்தான். சாதாரண காதலில்லை. அவனையே ஆண்டாள் தினுசில் கணவனாய், காதலனாய், ஸ்நேகிதனாய் உருவமைத்து....

"நடக்குமா சுரேஷ்?"

"எங்க வீட்டு நாய்க்குட்டியா?"

சின்ன 'கடி'களுக்கெல்லாம் பெரிசாய் சிரிப்பு வரும்.

"நம்ம கல்யாணம்."

"உங்கழுத்துல தாலினு ஒண்ணு ஏறிச்சினா அது நான் கட்றதாத்தான் இருக்கும் சங்கரி."



யப்பா... அன்றைக்கு ராத்திரி முழுக்க கனவு.

'நீதானே எந்தன் பொன்வசந்தம்' என்று பாடிக் கொண்டிருந்த டிரான்சிஸ்டரை இழுத்து தலைமாட்டில் வைத்துக் கொண்டாள். சுரேஷ் காதருகே வந்து நிமிண்டினான். முகத்தை லேசாய் முகத்தில் சாய்த்து கண் மூடினான். ஸ்பரிசம் பட்டதும் சிலிர்த்தது. லேசாய் சிரிப்பு வந்தது.

"என்னடி ராத்திரி நேரமும் அதுவுமா சிரிப்பு?"

அம்மா அதட்டினாள்.

"ஒண்ணுமில்லம்மா."

சுரேஷிடம் காலையில் அம்மா கேட்டதை பத்து தடவையாவது சொன்னாள். 'என் மனசெங்கும் நீங்கள்தான்' என்று கடிதம் எழுதிக் கொடுத்தாள். மறக்காமல் கீழே 'சங்கரி சுரேஷ்' என்று கையெழுத்திட்டாள்.

ஆனால் இந்தியா 'மாப்'பைத் தேடின கல்யாணி கடிதத்தை டிராவிலிருந்து எடுப்பாள் என்று நினைக்கவில்லை.

"ம்மா... இத பாரு... சங்கரிக்கா யாருக்கோ லெட்டர் எழுதிருக்கு..."

அம்மா கடிதத்தை வாசித்து ரௌத்ரமானாள். அப்பா சுரேஷின் தகப்பனிடம் கத்த, சண்டை முற்றியது. ஊரிலிருந்து மாமன், சித்தப்பன் என்று உறவுகள் அரிவாளோடு களத்தில் இறங்க முதல் முறையாக சங்கரி பயப்பட்டாள். ஒரு உயிர். அதுவும் சுரேஷ் உயிர். கடவுளே, காப்பாற்று.

அவனைக் காப்பாற்றியாக வேண்டும் என்பதற்காகவே அப்பா காட்டிய தெற்றுப்பல் மாப்பிள்ளையை கல்யாணம் செய்ய சம்மதித்தாள். ஆயிரம் மிரட்டல்கள். ஆனால் சங்கரி கேட்டதெல்லாம் ஒன்று. ஒன்று மட்டும்தான்.

"அப்பா... அவர ஒண்ணும் பண்ணிறாதீங்க."

"நான் என்ன பண்ண முடியும்? நீ ஒழுங்கா குடித்தனம் நடத்து. போறும். அதான் என் சந்தோஷம் சங்கரி."

எனக்குச் சந்தோஷம் இல்லையே அப்பா... சங்கரி சொல்ல நினைத்தாள். சொல்ல வில்லை. சுரேஷ்... நீ நலமாயிரு. அது போதும். கல்யாணம் கட்டி பிள்ளை பெற்று குடும்பம் நடத்தினால்தான் காதலா என்ன? நீ நல்லாயிருக்க வேண்டும் என்று நினைப்பதே காதல்தானே.

மனசு பொத்துக் கொண்டு அழுகை வந்தது.

"சங்கரி..." ஜன்னல் வழியாய் கிசுகிசுப்பாய் குரல் கேட்டது. சங்கரி எட்டிப் பார்த்தாள். சுரேஷ்.

"எதுக்கு வந்தீங்க சுரேஷ்.. போயிருங்க."

"வா சங்கரி... வெளிய வா."

"வந்தா கொன்னே போட்டுறுவாங்க.. போயிருங்க."

"கொல்ல மாட்டாங்க. நானிருக்கிற வரைக்கும் கொல்ல விடமாட்டேன் சங்கரி."

"நடக்காது சுரேஷ்..."

"வா. நேரமாக்காதே."

என்ன தைரியமோ - எங்கிருந்து வந்ததோ சங்கரி வெளியேறினாள். அடுத்த வேளை உடுத்த மாற்றுத் துணியில்லை. ஆனால் தைரியம். அதைவிட காதல். அந்த ராத்திரி நேரம் அடைத்த பிள்ளையார் கோவில் வாசலில் மஞ்சள் கோர்த்த கயிறை சுரேஷ் கட்டும் போது அழுகை வந்தது.

அதற்குள் வீட்டில் பிரளயம் நடந்திருக்கிறது. அரிக்கேன் விளக்கும் டார்ச்சுமாய் ஆள் தேட, சித்தப்பாதான் கோவில் வாசலில் கண்டுபிடித்தார். பார்த்த உடனே அவருக்கு அந்த புது மஞ்சள் கயிறு கண்ணில் தென்படவில்லை. சங்கரியை பலம் கொண்டு இழுத்தார்.

"தொடாதீங்க.. அடுத்தவன் பொண்டாட்டி மேல கைவைக்காதீங்க..." சங்கரி அலறினாள்.

"அடுத்தவன் பொண்டாட்டியா? இனி கேசவன் கட்டணாதானடி தாலி."

சொன்னவர் பார்வை கழுத்தில் பட, மஞ்சள் கயிறு மார்பில் தவழ்ந்ததைப் பார்த்தார். "அடப்பாவி மவளே... இதென்ன திருட்டுத் தாலி.. ஏலேய் சண்முகம்... இங்க வா."

அவர் கத்தின கத்தலில் மறுநிமிஷம் அப்பா கண்முன் நின்றிருந்தார்.

"பாருடா... உன் மக கழுத்தை."

அப்பா கத்துவார் என்று எதிர்பார்த்தாள். கிட்டே வந்து கட்டிய தாலியை அற்றுப் போடு

# காதலுக்கு ஜே!



வார் என்று நினைக்கவில்லை. தாலியை அறுத்து சுரேஷ் முகத்தில் எறிந்தார். "எடுத்துட்டுப் போல நாதியத்த நாயே..."

அன்று பார்த்ததுதான். அதற்குப் பிறகு பார்க்கிற சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. வாய்க்கும் வாய்ப்பைக் கொடுக்கவில்லை. சுரேஷ் என்னானான்? தெரியாது. கேசவனோடு கல்யாணமாகி ஊருக்குப் போனபோது பக்கத்து வீட்டு இந்து சுரேஷை மெட்ராஸில் படிக்க வைக்கிறார்கள் என்று சொன்னதோடு சரி. அதற்குப் பிறகு சுழன்ற சுழலில் சுரேஷ் கொஞ்சம் மறந்தும் போனாள்.

இன்று கேசவன் கேள்வியை வீசும் வரை...

ராத்திரி அடுக்களை மேடை துடைக்கும் போது ரேணுகா வந்தாள். 'நான் துடைக்கறேண்ணி' என்று வலிய ஸ்பாஞ்சை வாங்கிக் கொண்டாள்.

"கோபமா ரேணுகா... நான் உங்கண்ணன்ட்ட சொல்லிட்டேன்னு."

"அண்ணன் தம்பலை அண்ணி."

"ஜாக்ரதை ரேணுகா... நல்லவனான்னு

தெரியணும்..."

"நல்லவர்தாண்ணி..."

"எப்படித் தெரியும்?"

ரேணுகா பதில் பேசத் தெரியாது நிமிர்ந்து பார்த்தாள். சட்டென்று உள்ளே போனாள். படுக்கப் போகும்போது கேசவன் கூப்பிட்டான்.

"ஏதோ ஒரு பையனோட ரோட்ல பேசிட்டாளு உடனேயே காதல்னு முத்திரை குத்திடறதா? அவ க்ளாஸ்மேட்டுங்கா."

"பேசலைங்க. லெட்டர் கொடுத்தா."

"சும்மாரு... உனக்கென்ன தெரியும்? பொய் சொல்லாதே."

"நான் ஒண்ணும் பொய் சொல்லல. ரேணுதான்..."

"திருப்பித் திருப்பிச் சொல்லாத... காதல்னா என்னன்னு தெரியுமா நாயே உனக்கு? ரோட்ல பேசினா காதலா?"

காதலென்றால் என்னவென்று எனக்குத் தெரியும் கேசவா. முன்னாலேயே தாலி கட்டி அறுத்தவள்தான். உன்னிடமிருந்து மறைக்கப்பட்ட நிஜம் சொல்லவா? மனசின் ஓரத்தில் ஈரம் கசிந்தது. சுரேஷ்... உன்னைக் கல்யாணம் பண்ணியிருந்தால் மனசும் மனசும் கலந்திருந்திருக்கும். இப்போது இது வெறும் உடலும் உடலும் கலந்த கல்யாணம்.

ராத்திரி முழுக்க பொட்டு தூக்கமில்லை. வருஷக்கணக்காய் மறந்திருந்த காதல் கண்முன் விரித்தாடியது. சுரேஷ் அதற்கப்புறம் என்னவானான்? படித்து முடித்து விட்டு என்ன செய்தான்? கல்யாணம் பண்ணியிருப்பானா? யாரை... என்னை மறந்தா? இதென்ன கேள்வி? நான் கல்யாணம் பண்ணவில்லையா? அதனால் சுரேஷை வெறுத்தா போனேன்?

சுரேஷும் நலமாயிருக்க வேண்டும் என்று வேண்டிக் கொள் சங்கரி. உனக்கில்லாத பிள்ளை பாக்கியம் அவனுக்காவது இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொள்.

திடீரென்றுதான் அந்த எண்ணம் மனசில் உதித்தது. நாளைக்கு தூத்துக்குடி போனால் என்ன... சுரேஷ் நன்றாயிருக்கிறானா என்று விசாரித்து... அப்படியே அம்மாவையும் பார்த்து விட்டு வரலாம்.

தூத்துக்குடி போகிறேன் என்றதும் கேசவன் முகம் மாறினான். அம்மா வீட்டுக்குப் போவது அவனுக்குப் பிடிக்காத விஷயம்.

"சாயந்திரம் வந்துடுவேன்."

"சரி."

ரேணுகா முகத்தை திருப்பிக் கொண்டாள். மாமி சட்டென்று சமையலறைக்குள் புகுந்தாள். பஸ்ஸில் ஏறி உட்காரும் வரை அந்த பகைப் பார்வை மனசில் ஊஞ்சலாடியது. எதற்காக இத்தனை காழ்ப்புணர்வு? ஏன்? ரேணுகா வாழ்வு நலமாயிருக்க வேண்டும் என்று நினைப்பது தவறா?

நான் இப்போது சுரேஷை விசாரிக்கப் போவது மட்டும் தவறில்லையா என்ன? தவறா? நியாயமாகப் பார்த்தால் கேசவனோடு வாழ்க்கை நடத்துவதுதான் தவறு. இப்போது என்ன சுரேஷோடு வாழவா போகிறேன்? நலமாயிருக்கிறானா என்று விசாரிக்கக் கூட மறந்ததைக் கேட்க நினைப்பது தவறா என்ன?

மரக்கடைகிட்டே போகும் போது எதிரே வரும் சிறுமியிடம் சுரேஷ் விலாசம் கேட்டால் "எங்கப்பாவா?" என்று சொன்னால் எப்படியிருக்கும்? அதுவும் "என் பெயரும் சங்கரிதான் ஆண்ட்டி" என்று சிரித்தால்...

மனசுக்குள் சிலிர்த்தது மனசு... மனசு... மனசு... கடவுளே! விதியே மனசுதானா? பஸ்ஸிலிருந்து இறங்கி நேரே மரக்கடை தெருவிலிருந்த பெட்டிக் கடையில் பேப்பர் வாங்கினான்.

"இங்க சுரேஷ்னு ஒருத்தர் மெட்ராஸ்ல படிச்சிட்டிருந்தாரே... அந்த வீடு" பெட்டிக் கடைக்காரரை விசாரித்தான்.

"அவராம்மா? கல்யாண விஷயமா?"

"கல்யாணமா?"

"இந்தத் தெருல கல்யாணமாகாம இருக்கறது அவர்தான்ம்மா. அதனால ஏகப்பட்ட சம்பந்தக்காரங்க விசாரிக்க வருவாங்க. அதான் கேட்டேன்."

"கல்யாணமாகலையா?" குரல் உடைந்து வார்த்தை சிதறியது.

"ஆகலம்மா. அந்தத் தம்பி ஏதோ காதல் தோல்விங்குது."

ஏதோ காதல் தோல்வி இல்லை. நான்தான் அது. நான் புருஷன், குடும்பம் என்றிருக்க அவன் இறந்து போன நினைவுகளுக்குத் தாலி கட்டிக் கொண்டு...

பெட்டிக்கடை கம்பை கைத்தாங்கலாய் பிடித்துக் கொண்டான். வேறொன்றும் தோன்றவில்லை. அம்மா வீட்டுக்கு போகத் தோன்றவில்லை. எதுவும் தோன்றவில்லை. இத்தனை நாள்... இத்தனை வருஷம் உயிராய் காதலித்த சுரேஷ் எப்படியிருக்கிறான் என்று விசாரித்தாயா நீ? நினைவூட்டின ரேணுவுக்கு நன்றி சொல். அவளுக்கு நல்வழி காட்டு. காத்திருக்கச் சொல். அவசரப்பட்டு உன்னை மாதிரி ஓடிப் போகச் சொல்லாதே. எதிர்த்துப் போராடச் சொல். போராட்டமும் நேசமும் கலந்தது காதல் என்று சொல். எதுவும் அவளுக்குப் பிடிபடவில்லையென்றால் -

உன் கதையைச் சொல்.

மனசு கட்டளை இட்டுக் கொண்டிருந்தது!

---

உங்கள் பிள்ளைகள் நல்லவர்களா? உங்கள் சொத்து அவர்களுக்குத் தேவையில்லை; உங்கள் பிள்ளைகள் கெட்டவர்களா? உங்கள் சொத்து அவர்களுக்குப் பயன்படப் போவதில்லை! - பல்கேரிய பழமொழி

- மு. முருகேசன்

# பார்த்திபன் கனவு

அமரர் கல்கி

## 26. படகு நகர்ந்தது!

பொன்னன், கோலை வாங்கிப் போட்டு இரண்டே எட்டில் படகை விக்கிரமன் நின்ற இடத்துக்குச் சமீபமாகக் கொண்டு வந்தான். படகு கரையோரமாக வந்து நின்றதும் கரையில் குதித்தான். விக்கிரமன் தாவி ஆர்வத்துடன் பொன்னனைக் கட்டிக் கொண்டான். "மகாராஜா! மறுபடியும் தங்களை இவ்விதம் பார்ப்பதற்கு எனக்குக் கொடுத்து வைத்திருந்ததே!" என்று சொல்லிப் பொன்னன் ஆனந்தக் கண்ணீர் வடித்தான்.

விக்கிரமன், "பொன்னா! சமய சஞ்சீவி என்றால் நீதான். இங்கு நின்றபடியே உன்னுடைய குடிசையைத்தான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். இரண்டு மூன்று நாளாகவே பார்த்துக் கொண்டிருக்கிறேன். இன்றைக்கு உன் படகைப் பார்த்திராவிட்டால், நீந்தி அக்கரைக்கு வருவதற்கு முயன்றிருப்பேன்... அதோ பார், பொன்னா! படகு நகர்கிறது. முதலில் அதைக் கட்டு" என்றான்.

பொன்னன் ஓடிப் போய்ப் படகைப் பிடித்து இழுத்துக் கரையோரமிருந்த ஒரு மரத்தின் வேரில் அதைக் கயிற்றினால் கட்டி விட்டு வந்தான். இருவரும் ஜலக்கரையில் மரத்தடியில் உட்கார்ந்தார்கள்.

"பொன்னா! அப்புறம் என்ன செய்தி சொல்லு! அந்தக் காட்டாற்றங்கரையில் நடந்ததெல்லாம் எனக்குச் சொப்பனம் போல் தோன்றுகிறது. இன்னுங்கூட நான் கனவு காண்கிறேனா அல்லது உண்மையாகவே நமது அருமைக் காவேரி நதிக்கரையில் இருக்கிறேனா என்று சந்தேகமாயிருக்கிறது. நீ எப்போது என்னைப் பிரிந்து சென்றாய்? ஏன் பிரிந்து போனாய்?" என்று விக்கிரமன் கேட்டான்.

"ஐயோ, மகாராஜா; நான் எவ்வளவோ பிரயத்தனம் செய்து வைத்தியனை அழைத்துக் கொண்டு வந்து பார்க்கும் போது, உங்களைக் காணவில்லை, அப்போது எனக்கு எப்படியிருந்தது தெரியுமா?"

"வைத்தியனை அழைத்துவரப் போனாயா? எப்போது? எல்லாம் விவரமாய்ச் சொல்லு, பொன்னா!"

"அன்று ராத்திரி மகேந்திர மண்டபத்தில் நாம் படுத்துக் கொண்டிருந்தது ஞாபகம் இருக்கிறதா, மகாராஜா?"

"ஆமாம், ஞாபகம் இருக்கிறது. ஐயோ! அன்றிரவை நினைத்தாலே என்னவோ செய்கிறது, பொன்னா!"

"மறுநாள் காலையில், நாம் உறையூருக்குக் கிளம்புவதென்று தீர்மானித்துக் கொண்டல்லவா படுத்தோம்? அவ்விதமே மறுநாள் அதிகாலையில் நான் எழுந்திருந்தேன்; உங்களையும் எழுப்பினேன். ஆனால் உங்களுக்குக் கடும் ஜுரம் அடித்துக் கொண்டிருந்தது. உங்களால் நடக்க முடியவில்லை; சற்று நடந்து பார்த்துவிட்டுத் திரும்பி வந்து மண்டபத்தில் படுத்துக் கொண்டீர்கள். நேரமாக ஆக, உங்களுக்கு ஜுரம் அதிகமாகிக் கொண்டிருந்தது. நான் என்ன தவியாய்த் தவித்தேன் தெரியுமா? தங்களைத் தனியாய் விட்டுவிட்டுப் போகவும் மனமில்லை. பக்கத்தில் சும்மா இருப்பதிலும் உபயோகமில்லை. கடைசியில், பல்லைக் கடித்துக் கொண்டு வைத்தியனைக் கூட்டி வரக் கிளம்பினேன். வைத்தியன் லேசில் கிடைத்தானா? எப்படியோ தேடிப் பிடித்து ஒருவனை அழைத்துக் கொண்டு வந்து

பார்த்தால், மண்டபத்தில் உங்களைக் காணோம்! எனக்குப் பைத்தியம் பிடித்தது போலாகிவிட்டது—"

"அப்புறம் என்னதான் செய்தாய்?" என்று விக்கிரமன் கேட்டான்.

பொன்னன் பிறகு தான் அங்குமிங்கும் ஓடி அலைந்தது, குள்ளனைக் கண்டது, குந்தவிதேவி தன் பல்லக்கில் அவரை ஏற்றிக் கொண்டு போனதைத் தெரிந்து கொண்டது, பராந்தகபுரம் வரையில் தொடர்ந்து வந்து கண்ணால் பார்த்துத் திருப்தியடைந்தது, பிறகு மாமல்லபுரம் போய்ச் சிவனடியாரைச் சந்தித்தது, அவரும் தானுமாகக் கொல்லி மலைச்சாரலுக்குப் போனது, இரகசிய வழியைக் கண்டுபிடித்தது, சிவனடியாரை மலைமேல் விட்டுவிட்டுத் தான் மட்டும் உறையூர் வந்தது ஆகிய விவரங்களை விவரமாகக் கூறினான்.

பொன்னன் சிவனடியாரைச் சிற்ப மண்டபத்தில் சந்தித்த செய்தி விக்கிரமனுக்கு வியப்பை அளித்தது.

"பொன்னா! அந்தச் சிற்ப மண்டபத்தில்தானே ஒற்றர் தலைவன் வீரசேனனுடன் நான் தங்கியிருந்தேன்? அதே இடத்தில் நீ சிவனடியாரைச் சந்தித்தது வியப்பாயிருக்கிறது பொன்னா! எனக்கு ஒரு சந்தேகங்கூட உண்டாகிறது" என்றான் விக்கிரமன்.

"என்ன மகாராஜா, சந்தேகம்?"

"அந்த ஒற்றர் தலைவன் ஒருவேளை நமது சிவனடியார் தானோ என்று."

"ஆம், மகாராஜா! ஒற்றர் தலைவன் வீரசேனர்தான் சிவனடியார், நான் மாமல்லபுரத்துச் சாலையிலிருந்து குறுக்கு வழி திரும்பிய போது எனக்கு முன்னால் ஒரு குதிரை வீரன் போவதைப் பார்த்தேன். தாங்கள் சொன்ன அடையாளங்களிலிருந்து அவர்தான் வீரசேனர் என்று ஊகித்துக் கொண்டேன். அவரே சிற்ப வீட்டுக்குள் நுழைந்து விட்டுச் சற்று நேரத்துக்கெல்லாம் வெளியே வந்த போது ஜடாமகுடத்துடன் சிவனடியாராக வந்தார்!"

"ஐயோ! அப்படியானால் நான் உண்மையில் யார் என்று பல்லவ சக்கரவர்த்தியின் ஒற்றர் தலைவனுக்குத் தெரியும்... ஆனால் ஆதி முதல் நமக்கு உதவி செய்து வந்திருப்பவர் அவர் தான் அல்லவா? இப்போது என்னைக் காட்டிக் கொடுத்து விடுவாரா?"

"ஒருநாளும் மாட்டார், சுவாமி! அவர் பல்லவ சக்கரவர்த்தியின் ஒற்றர் படைத் தலைவரானபோதிலும், போர்க்களத்தில் தங்கள் தந்தைக்கு வாக்குறுதி கொடுத்திருக்கிறார். அவரால் ஒரு அபாயமும் இல்லை ஆனால்—"

"ஆனால் என்ன, பொன்னா?"

"வேறொரு பெரும் அபாயம் இவ்விடத்தில் இருக்கிறது. மாரப்ப பூபதிதான் இப்போது சோழ நாட்டின் சேனாதிபதி தெரியுமல்லவா? அவருக்குத் தாங்கள் இங்கு வந்திருப்பது பற்றி எவ்விதமோ சந்தேகம் உதித்திருக்கிறது மகாராஜா! நாம் உடனே கிளம்பிப் போக வேண்டும்."

"இங்கே இருப்பதில் அதைவிடப் பெரிய அபாயம் வேறொன்று இருக்கிறது, பொன்னா! நாம் உடனே கிளம்ப வேண்டியதுதான்" என்று விக்கிரமன் கூறிய போது அவனுடைய முகத்தில் ஒருவிதமான கிளர்ச்சியைப் பொன்னன் கண்டான்.

"அது என்ன அபாயம், மகாராஜா?" என்று கேட்டான்.

"ஒரு இளம்பெண்ணின் கருவிழிகளில் உள்ள அபாயந்தான்" என்று கூறி விக்கிரமன் காவேரி நதியைப் பார்த்தான். சற்று நேரம் மௌனம் குடிகொண்டிருந்தது பிறகு விக்கிரமன் சொன்னான் :-

"உன்னிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்லப் போகிறேன்? பொன்னா! மூன்று வருஷத்துக்கு முன்னால் என்னை இங்கிருந்து சிறைப்படுத்திக் கொண்டு போன போது காஞ்சி நகரின் வீதியில் பல்லக்கில் சென்ற ஒரு பெண் என்னைப் பார்த்தாள். அவளே மறுபடியும் மாமல்லபுரத்தில் நான் கப்பல் ஏறிய போதும் கடற்கரையிலே நின்று என்னைக் கனிவுடன் பார்த்தாள். செண்பகத் தீவுக்குப் போய் மூன்று வருஷ காலமான பிறகும் அவளை என்னால்



மறக்க முடியவில்லை. அதிசயத்தைக் கேள், பொன்னா! அதே பெண்தான் மகேந்திர மண்டபத்தில் நான் ஜுரமடித்துக் கிடந்தபோது என்னைப் பார்த்து இங்கே எடுத்து வந்து காப்பாற்றினாள்."

"மகாராஜா! அப்பேர்ப்பட்ட புண்யவதி யார்? அந்தத் தேவியைப் பார்க்க எனக்கு ஆவலாயிருக்கிறது! பார்த்து எங்கள் மகாராஜாவைக் காப்பாற்றிக் கொடுத்ததற்காக நன்றி செலுத்த வேண்டும்."

"பொன்னா! விஷயத்தை அறிந்தால் நன்றி என்கிற பேச்சையே எடுக்க மாட்டாய்."

"ஐயோ, அது என்ன?"

"மூன்று நாளாக என் மனத்தில் ஒரு பெரிய போராட்டம் நடந்து வருகிறது, பொன்னா! கதைகளிலே நான் கேட்டிருக்கிறேன், காவியங்களிலே படித்திருக்கிறேன், பெண் மோகத்தினால் அழிந்தவர்களைப் பற்றி! அந்தக் கதி எனக்கும் நேர்ந்து விடும் போலிருக்கிறது. மேனகையின் மோகத்தினால் விசுவாமித்திரர் தபஸை இழந்தாரல்லவா? அம்மாதிரி நானும் ஆகிவிடுவேனோ என்று பயமாயிருக்கிறது. அந்தப் பெண் பொன்னா, அவ்வாறு என்னை அவளுடைய மோக வலைக்கு உள்ளாக்கி விட்டாள்....!"

பொன்னன் குறுக்கிட்டு,



"மகாராஜா! நான் படியாதவன்; அறியாதவன். இருந்தாலும் ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். அனுமதி தர வேண்டும்" என்றான்.

"சொல்லு பொன்னா? உனக்கு அனுமதி வேண்டுமா?"

"விசுவாமித்திர ரிஷி மேனகையினால் கெட்டதை மட்டும் சொல்கிறீர்கள். ஆனால், பெண்களால் மேன்மையடைந்தவர்கள் இல்லையா, மகாராஜா! சீதையால் ராமர் மேன்மையடையவில்லையா? கிருஷ்ணன் போய் ருக்மணியை எதற்காகக் கவர்ந்து கொண்டு வந்தார்? அர்ச்சுன மகாராஜா சுபத்திரையையடைந்ததினால் கெட்டுப் போய் விட்டாரா? முருகக்கடவுள் வள்ளியைத் தேடித் தினைப் புனத்துக்கு வந்தது ஏன்? அதனால் அவர் கெடுதலை அடைந்தாரா?...."

"பொன்னா! சரியான கேள்விதான் கேட்கிறாய். சீதையினால் ராமரும், ருக்மணியால் கிருஷ்ணனும், சுபத்திரையினால் அர்ச்சுனனும், வள்ளியினால் முருகனும் மேன்மையடைந்தது மட்டுமல்ல. அருள்மொழி ராணியினால் பார்த்திப மகாராஜாவும், வள்ளியினால் பொன்னனும் மேன்மையடைகிறார்கள்."

"அப்படிச் சொல்லுங்கள்! பின்னே, பெண் மோகம் பொல்லாதது என்றெல்லாம் ஏன் பேசுகிறீர்கள்?"

"கேள், பொன்னா! பெண் காதலினால் மனிதர்கள் சிலர் தேவர்களாகியிருக்கிறார்கள். அவர்கள் பாக்கியசாலிகள். ஆனால், தேவர்கள் சிலர் பெண் காதலினால் தேவத் தன்மையை இழந்து மனுஷ்யர்களிலும் கேடு கெட்டவர்களாகியிருக்கிறார்கள். நான் அத்தகைய துர்ப்பாக்கியன். என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்ட பெண் அத்தகையவளாயிருக்கிறாள். நான் என்னுடைய தர்மத்தையும், என்னுடைய பிரதிக்ஞையையும் கைவிடுவதற்கு அவளுடைய காதல் தூண்டுகோலாயிருக்கிறது. ஜுரம் குணமானதிலிருந்து எனக்கு அந்தப் பெண்ணின் நினைவைத் தவிர வேறு நினைவேயில்லை. அவளைப் பிரிந்து ஒரு நிமிஷமாவது உயிர் வாழ முடியாதென்று தோன்றுகிறது. அவளுக்காக சுவர்க்கத்தைக் கூட தியாகம் செய்யலாமென்று தோன்றும் போது, சோழ நாடாவது சுதந்திரமாவது? அவளுடன் சேர்ந்து வாழ்வதற்காகக் காஞ்சி நரசிம்ம பல்லவச் சக்கரவர்த்திக்குக் கப்பம் கட்டினால்தான் என்ன?...."

பொன்னனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. "விக்கிரமனுக்கு இது கடைசிச் சோதனை" என்று சிவனடியார் கூறியது அவனுக்கு நினைவு வந்தது.

"ஐயோ! என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? உறையூர்ச் சித்திர மண்டபத்தில் பார்த்திப மகாராஜாவிடம் தாங்கள் செய்த சபதம் ஞாபகம் இருக்கிறதா?" என்று கேட்டான்.

"ஞாபகம் இருக்கிறது பொன்னா! இன்னும் மறந்து போகவில்லை. ஆனால், எத்தனை நாளைக்கு ஞாபகம் இருக்குமோ, தெரியாது. தினம் தினம் என்னுடைய உறுதி குலைந்து வருகிறது. ஆகையினால்தான் உடனே கிளம்பிவிட வேண்டுமென்று

## அருள்வாக்கு

நிறைவேறாத ஆசையின் இரண்டு உருவங்கள்தாம் துக்கமும் கோபமும். நம் ஆசையின் நிறைவேற்றத்துக்குத் தடையாக இருந்தவர்கள் நம்மைவிடக் கீழ்ப்பட்டவர்களாக இருந்தால் அவர்களிடம் கோபத்தைக் காட்டுகிறோம்; அவர்கள் நமக்கு மேலே இருந்துவிட்டால் கோபித்துக் கொள்ள முடியாமல் நமக்குள்ளேயே துக்கப்பட்டுக் கொண்டு அழுகிறோம். கோபத்தின் கெட்ட சக்தி காமத்தின் சக்தியைவிடப் பெரியது. இதை நளசரித்திரமான 'நைஷதம்' வெகு அழகாகச் சொல்கிறது. கலி அரசன் வருகிறான். அவனது சேநாதிபதிகளாகக் காமனும் குரோதனும் வருகிறார்கள். கட்டியக்காரன் இவர்களுடைய பெருமைகளைப் பாடுகிறான். குரோதனைப் பற்றி இவன் என்ன பாடுகிறான்? 'காமன் புகாத இடமில்லை என்பார்கள். ஆனால் காமனும் புகாத ஒரு கோட்டை உண்டு. அந்தக் கோட்டைக்குள்ளும் இந்தக் குரோதன் குடி கொண்



"என்னது? மதுரையிலிருந்து விமானத்தில் சென்னை வர ஒரு வாரம் ஆச்சா?"

"அதையேன் கேட்கறீங்க? யாரோ தலைவர் மீனம்பாக்கத்திலிருந்து மைலாப்பூருக்கு ஹெலிகாப்டரிலே போறாராம். அதனாலே, மதுரையிலிருந்து கல்கத்தா, பாம்பே, பிரான்ஸ், அமெரிக்கான்னு திருப்பிவிட்டு, இப்பதான் வருது..."

- வி. பி. கிருஷ்ணசாமி



டிருக்கிறானாக்கும். அது எந்தக் கோட்டை தெரியுமா? துர்வாசருடைய இதயம்தான்' என்று குரோதனின் புகழைப் பாடுகிறான். காமமே அறியாத துர்வாச மகரிஷியும் கோபத்துக்கு ஆளானவர் என்று தாத்பரியம்.

நாம் இந்த மகாபாவியான குரோதனிடம் ரொம்பவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கொஞ்சம் யோசித்துப் பார்த்தாலும் நமக்கே தெரியும்: யாரையும் கோபித்துக் கொண்டு சத்தம் போட நமக்குச் சிறிதும் யோக்கியதை இல்லை என்றும், யாரை நாம் கோபித்துக் கொள்கிறோமோ அவர்கள் செய்கிற தவறுகளை, அதைவிடப் பெரிய தவறுகளைக்கூட செய்தவர் நாம் என்பதும் நம் அந்தராத்மாவுக்குத் தெரியும். அப்படியே நாம் தவறு செய்யாவிட்டாலும்கூட, அந்த மனிதன் அந்தச் சூழ்நிலையில் செய்த தவறை நாமும்கூட அந்தச் சூழ்நிலையில் இருந்தால் செய்திருக்கக்கூடும் என்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

குரோதன் நம்முடைய பெரிய சத்ரு. அவனை அண்டவிடாமல் எப்போதும் நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

சொல்கிறேன். இப்போதே உன்னுடன் வரச் சித்தமாயிருக்கிறேன்; கிளம்பலாமா?" என்றான் விக்கிரமன்.

"கிளம்பலாம் சுவாமி! ஆனால் இந்தத் தீவில் நமக்கு ஒரு காரியம் இருக்கிறதே! மகாராணி கொடுத்த பெட்டியை இங்கே புதைத்து வைத்திருக்கிறேன்..."

"பார்த்தாயா! அதைக்கூட மறந்து விட்டேன். இன்னும் இரண்டு நாள் போனால் வந்த காரியத்தையே மறந்து விடுவேன், என்னையே கூட மறந்து விடுவேன்! இன்றைக்கு அந்தப் பெண் வருவதற்குள் நாம் போய் விட வேண்டும். பெட்டியை எங்கே புதைத்திருக்கிறாய்?" என்று விக்கிரமன் பரபரப்புடன் கேட்டான்.

"சமீபத்தில்தான் இருக்கிறது, சுவாமி!"

"தோண்டி எடுக்க வேண்டுமல்லவா?"

"முன் ஜாக்கிரதையாக மண்வெட்டியும் கடப்பாறையும் கொண்டு வந்திருக்கிறேன்" என்று சொல்லிப் பொன்னன் படகின் அடியிலிருந்து அவற்றை எடுத்துக் கொண்டு வந்தான்.

இரண்டு பேரும் விரைவாக நடந்து அந்த அடர்ந்த மாந்தோப்புக்குள்ளே போனார்கள்.

அவர்கள் போய்ச் சற்று நேரத்துக்கெல்லாம் சமீபத்திலிருந்த ஒரு மரத்தின் மறைவிலிருந்து குந்தவிதேவி வெளியில் வந்தாள். சுற்றும் முற்றும் பார்த்து விட்டு நதிக்கரையில் படகு கட்டியிருந்த இடத்துக்குச் சென்றாள். இன்னும் ஒரு கள்ளப் பார்வை அங்குமிங்கும் பார்த்து விட்டு, படகை மரத்தின் வேருடன் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்து விட்டாள். படகு மெதுவாக நகர்ந்தது. பிறகு வேகமாய் நகர்ந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் வெள்ளப் பிரவாகத்தில் அகப்பட்டுக் கொண்டு அதிவேகமாய்ச் சுழன்று செல்லத் தொடங்கியது. அதைப் பார்த்துக் கொண்டிருந்த குந்தவியின் முகத்தில் குறுநகை பூத்தது.

(தொடரும்)

"டாக்டர் பிட் அடிச்சி பாஸ் பண்ணியவர் போலிருக்கு....!"

"எப்படிச் சொல்றே?"

"எப்படி ஆபரேஷன் பண்றதுன்னு ஒரு சின்ன பேப்பர்ல எழுதி, ஆபரேஷன் டேபிளுக்குக் கீழே வச்சிக்கிட்டு ஆபரேஷன் பண்ணுகிறார் பாரேன்!"

- ஜெ. கண்ணன்



# தேவைகள் என்பவை
# சொல்லிக்கொண்டு வருவதில்லை.
# ஆகவே...



தென்னை:
வலிமை, பல்வேறு உபயோகம் நிறைவான பலன் ஆகியவற்றின் சின்னம்.

இன்றே பணத்தைச் சேமிப்பது அவசியம். திடுமென எந்த நேரத்திலும் உங்களுக்குப் பணத்தேவை ஏற்படக்கூடும். சட்டென்று உடனே அந்தத் தேவையைப் பூர்த்தி செய்ய இயலாமல் போய்விடலாம். குழந்தையின் உயர்கல்வி, திருமணம், சொந்தத்தில் வீடு, வாகனம் இப்படி எந்தவொரு காரணத்துக்காகவும் பணத்தேவை ஏற்பட்டால் அதனைச் சிரமமின்றிச் சமாளிப்பது எப்படி? உங்களுக்கு அவசியப்படும் நேரத்தில் நல்ல லாபத்துடன் திரும்பக் கிடைக்கும் விதத்தில் இன்றே புத்திசாலித்தனமாக முதலீடு செய்து வைப்பதுதான் அதற்குச் சரியான வழி.

சேமிக்க வேண்டும் என முடிவு செய்து விட்டால் மட்டும் போதுமா? நீங்கள் முதலீடு செய்யப்போகும் நிறுவனம் எப்படிப் பட்டது என்பதைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டாமா?

எந்தவொரு நிறுவனத்திலும் முதலீடு செய்வதற்கு முன் பின்வரும் மூன்று அம்சங்களும் அதில் இடம் பெற்றிருக்கின்றனவா என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.

- உங்கள் பணத்துக்குப் பாதுகாப்பு
- அதனை எளிதில் திரும்பப்பெறும் நிதி வசதி
- பண்புடன் கூடிய சேவை

பொதுமக்கள் நலனைக் கருத்தில் கொண்டு வெளியிடப்பெறுவது.




பதிவு அலுவலகம்: 53, பிஷப் கார்டன்,
(கிரீன்வேஸ் ரோடுக்கு அப்பால்)
சென்னை - 600 028 போன்: 4936931, 4936932

உ ல க க் க ண் ணோ ட் ட ம் ; த னி ம னி த மே ம் பா டு

Insight-757

# வாடிக்கையாளரோடு எங்களை உறுதியாக இணைக்கும் அம்சம் - டெபாசிட் தொகையை எளிதில் திரும்பப்பெறும் நிதி வசதி



இளநீர்:
இயற்கை வழங்கும் நீரை அதன் உயர் சத்துக்களோடு நீண்ட காலத்துக்குப் பாதுகாக்கும் திறன் கொண்டது. அதனை எளிதில் பயன்படுத்த முடிவதோடு, அதன் மூலம் புத்துணர்ச்சியையும் பெற முடிகிறது.

ராம் காஷ்யப் இன்வெஸ்ட்மென்ட் லிமிடெட். நம்பகத்தன்மை, பண்பாடு, தொலைநோக்கு ஆகியவை இந்நிறுவனத்தின் அடிப்படைப் பண்புகள். நிதித்துறையில் அனுபவம் நிறைந்த நிபுணர்களும் வர்த்தகர்களும் இணைந்து இதனைத் தொடங்கியுள்ளனர். குடும்பத்துக்குத் தேவைப்படும் எலெக்ட்ரானிக் சாதனங்கள், ஃபர்னிச்சர்கள், கம்ப்யூட்டர்கள் ஆகியவற்றையும், கார்கள், லாரிகள் போன்ற வாகனங்களையும் வாங்க உதவும் லீசிங், தவணை முறை நிதியுதவி ஆகிய வழிமுறைகளில் ஈடுபட்டுள்ள நிறுவனம். சாமான்யரும் கூட சுலபமாகச் சிறந்த பொருள்களை வாங்கித் தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்ள உதவுவது இந் நிறுவனத்தின் முக்கிய நோக்கம். இதன் ஆண்டு வணிகம் 1996 மார்ச் முடிவில் ரூ.30 கோடியாகவும், இந்நூற்றாண்டின் முடிவில் ரூ.500 கோடியாகவும் இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

**வலுவான மூலதன ஆதாரம், அளிக்கும் நிதியுதவியைத் திரும்பப் பெறுவதில் சிறப்பான நிலை, பணத்தை முதலீடு செய்வதில் மிகுந்த கவனம் ஆகியவை இந்நிறுவனத்தின் சிறப்பம்சங்கள். வீடியோகான் லீசிங் & இண்டஸ்ட்ரியல் ஃபைனான்ஸ் லிமிடெட் நிறுவனத்தின் ஈக்விடி பங்கேற்பு மற்றும் பல முன்னணி நிதி நிறுவனங்களின் ஆதரவைப் பெற்றிருப்பதால் பக்க பலத்துக்குக் குறைவில்லை. எனவே, முதிர்வடைந்த பின்னரோ, அல்லது தேவைப்படும் நேரத்திலோ டெபாசிட் தொகையை எளிதில் உடனடியாகத் திரும்பப் பெற முடியும். தவிர, உரிய நேரத்தில் வட்டியும் அளிக்கப்பட்டு விடுகிறது.**

**இவையனைத்தும் மிகுந்த நம்பகத்தன்மையோடு ஒன்று சேர்ந்து உங்கள் டெபாசிட் தொகைகளுக்கு அதிகபட்சப் பாதுகாப்பை அளிப்பது நிச்சயம்.**

---

**வீடியோகான் லீசிங் & இண்டஸ்ட்ரியல் ஃபைனான்ஸ் லிமிடெட் நிறுவனத்தின் ஈக்விடி பங்கேற்புடன்**

---




நிர்வாக அலுவலகம்: 5-D, மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ்,
4, லேடி தேசிகாச்சாரி ரோடு, மயிலாப்பூர், சென்னை-600 004.
போன்: 4994303, 4995148

**கிளைகள்:**

தஞ்சாவூர்: ராமலிங்க பத்தர் பில்டிங், 2681/72, தெற்கு மெயின் ரோடு,
தஞ்சாவூர்-613 009. போன்: 23331.
கோயம்புத்தூர்: ஏசியாடிக் பில்டிங், 2-வது மாடி, (விஜிபி ஷோரூம் அருகில்)
378, டாக்டர் நஞ்சப்பா ரோடு, கோயம்புத்தூர் - 641 018.
திருச்சிராப்பள்ளி: வைகை, முதல் மாடி, தலைமை தபால் அலுவலகம் எதிரில்,
பாரதியார் சாலை, திருச்சிராப்பள்ளி - 620 001. போன்: 461137 PP.
மதுரை: 41, மயூரா காம்ப்ளெக்ஸ், 48, தானப்ப முதலி தெரு,
மதுரை - 625 001.
ஹைதராபாத்: 5-9-47/3, பஷீர்பாக், ஹைதராபாத் - 500 029.
போன்: 232962.
சித்தூர்: 18/747, ஹைரோடு, பாங்க் ஆஃப் இந்தியா எதிரில்,
சித்தூர் - 517 001. போன்: 22044, 25788.

---

## டெபாசிட்டுகள் ஏற்கப்படுகின்றன.
## எங்களுடன் இணைந்து வளம் பெறுங்கள்

---

உலகக் கண்ணோட்டம்; தனி மனித மேம்பாடு

Insight-759

கட்டுப்பாடான ஃபிக்சட் டெபாசிட் விளம்பரம் 20.5.95 தேதியிட்ட தமிழ் நாளிதழில் வெளியிடப்பட்டுள்ளது.

"யாரு... யார் நீங்க?" கதவு திறந்து உட்கார்ந்த பெண்ணைப் பார்த்ததும் கதிரேசன் பதறினான்.

அந்தப் பெண், எட்டு தப்படி நடப்பதற்குள் நனைந்து போன முக்கால்வாசி உடம்பை காரின் முதுகில் தேய்த்துக் கொண்டிருந்தது.

"மேடம், ஈரமாக்கறீங்க... யார் நீங்க?" மறுபடி கத்தினான்.

"நாச்சியப்ப ஐயா காரு தானே?"

"ஆமா."

"எஸ்டேட்டுக்குத் தானே போவுது?"

"ஆமா."

"அதனால தான் ஏறினேன்."

"எஸ்டேட்டுக்குப் போறவங்களெல்லாம் கார்லதான் போகணும்னு கட்டளையா என்ன? இறங்கி நடந்து போங்க."

சொர்ணலட்சுமி ஆச்சரியத்தோடு அவனைப் பார்த்தாள். 'இந்த மழையில் இறங்கி நடந்து போங்க' என்று ஒருவன் மற்றவரைச் சொல்ல முடியுமானால் அவன் எப்படி மனிதனாக இருக்க முடியும் என்பது போல் பார்த்தாள்.

அந்த வார்த்தைகளைச் சொன்ன நேரம் கதிரேசனுக்கு உவப்பாக இருந்தாலும் சொல்லி முடித்த பிறகு கஷ்டமாகத்தான் இருந்தது.

ஏன் சொன்னோம் என்று தோன்றியது. ஆனால் எல்லோரையும் ஏற்றிக் கொண்டு போகவா கார் இருக்கிறது என்கிற எண்ணமும் வந்தது.

"நீங்க நாச்சியப்ப செட்டியார் கார் டிரைவர்தானே..? எஸ்டேட்ல இருக்கறவங்க எனக்கு நல்லா தெரிஞ்சவங்க. என்னைக் கூட்டிட்டுப் போறதால உங்களை ஒண்ணும் சொல்லிட மாட்டாங்க. அப்படியே எதாவது சொன்னாலும் நான்தான் கம்ப்பல் பண்ணி ஏறினேன்னு சொல்லிடுவேன்."

"என்னா பண்ணி ஏறினீங்க?"

"கம்ப்பல் பண்ணி..."

"யாரை கம்ப்பல் பண்ணி?"

"உங்களை கம்ப்பல் பண்ணி."

"நல்லாருக்கு கதை. சேத்துல வுழுந்து எழுந்த வாத்து மாதிரி சொட்ட சொட்ட நனைஞ்சிட்டு தடம் தடமா ஈரம் பண்ணிட்டு ஏன் எதுன்னு கேக்கறதுக்கு முன்னாடியே உள்ள உக்காந்துட்டு... ஏதோ நீங்களும் நானும் மாத்தி மாத்தி பேசினா மாதிரியும் எங்கிட்ட எல்லா விவரமும் சொல்லி ஏறி உக்காந்த மாதிரியும் சொல்றீங்களே.. பொம்பளையாச்சேன்னு தொடாத போறேன். இதே ஒரு ஆம்பளையா இருந்தா நெட்டுக்குத்தலா தள்ளிவுட்டுருப்பேன்."

"நரிக்கு நாட்டாமை குடுத்தா இடைக்கு ரெண்டு ஆடு கேட்கும். சொந்தக் கார் வெச்சிருக்கறவன் நெட்டித் தள்ள மாட்டான். அங்க, பைசா சம்பளம் வாங்கி காலந்தள்ற நான் பாரு... அவனுக்குதான் மனசு இறங்காது. இந்த மழைல எப்படிப் போறது?"

கதிரேசனுக்குப் பதில் பேசத் தெரியவில்லை. பேச்சுக்கு எதிர்ப் பேச்சு பேசுவது ஒரு கலை. சட்டென்று வீசப்படும் வார்த்தைகளின் அர்த்தத்தைப் புரிந்து கொண்டு அதன் கனம் தெரிந்து கொண்டு எதிர்த்தாக்குதல் செய்ய எல்லோராலும் முடியாது. தேவையில்லாது ஒரு பெண்ணோடு நெடு நேரம் பேசிக் கொண்டிருக்கிறோம் என்று ஓர் அலுப்பை கதிரேசன் உணர்ந்தான். நிறைய பெண்கள் அசட்டு கர்விகள். நிதானமில்லாதவர்கள் இந்தப் பெண் அறிவுக் களையே இல்லாது மாடு மாதிரி இருக்கிறது. நடு மூக்கில் மேடு இருக்கிறது. கண்கள் இறங்கிப் போயிருக்கின்றன. இரண்டு நிமிடத்திற்குள் கையைத் தூக்கி முன் தலையைப் பத்து தடவை சரி செய்து விட்டது. கழுத்து, தோள்பட்டை, புஜம், மார்பு, இடுப்பு எல்லாவற்றிலும் ஒரு சதைத் திமிர் இருக்கிறது. மூன்றுவேளை சாப்பிட்டு, இரண்டு வேளை தூங்கி, நடையில் அதிகமான குழைவு காண்பித்து, பயந்தது போல நடித்து பயமே இல்லாதது போல் கத்தி, எந்தத் தெளிவும் இல்லாத பெண்கள் கூட்டத்தில் இவளும் ஒன்று.

இப்படி ஒரு புண்ணாக்கு நம்ம எஸ்டேட்டுக்கு எதற்கு வருகிறது... யாரைப் பார்க்க வருகிறது. ரெண்டு ஹேண்ட் பேக் இருக்கிறதே.... ஏலக்காய் பறிக்கிறாளா... ரொம்ப பாமரத்தனமாவும் தெரியவில்லையே... சமையல் வேலைக்கு வருகிறதா?".

"எஸ்டேட்ல யாரைப் பார்க்கப் போறீங்க?"

# 11 என்னுயிரும் நீயல்லவோ



"எங்க அக்காவ." சொர்ணலட்சுமி தலை சிலுப்பிப் பேசினாள்.

"யார் உங்க அக்கா?"

"எஸ்டேட் ஓனர். நாப்பது ஏக்கரும் அவங்களதுதான். சிங்கிள் லேடியா கவனிச்சிக்கிறாங்க."

"எஸ்டேட் நாச்சியப்ப செட்டியாருது தெரியுமில்ல."

"அவரு பரலோகம் போயிட்டாரு. அறுபது வயசு வரைக்கும் ஆடாத ஆட்டமெல்லாம் ஆடி தடுக்குன்னு போயிட்டாரு."

கதிரேசன் மறுபடியும் திகைத்து நின்றான்.

'இதென்ன கன்றாவி... இவள் போல இரண்டுங்கெட்டானிடம் என் தகப்பன் இழிவுபட வேண்டிய அவசியமென்ன? பகவதியின் தங்கையா இவள்? யாரோ ஒரு தம்பி. எங்கோ ஒரு வேலையில்.... நல்ல

பாலகுமாரன்

விதமாக இருக்கிறான் என்றல்லவா கேள்விப் பட்டிருக்கிறோம். இப்படி ஒரு எருமைத் தங்கை இருப்பதாய் பகவதி சொன்னதில் லையே....'

"அக்கான்னா யார் அக்கா? என்ன பேரு?"

"பகவதிய நான் அக்கான்னுதான் கூப்புடு வேன். நாங்கள்ளாம் ஒண்ணாதான் வளர்ந் தோம். சின்ன வயசிலேயே அக்கா கல்யா ணம் கட்டிட்டுப் போயிடுச்சு."

"என்ன வகையில அக்கா?"

"அவங்க தம்பி மனைவியோட அக்கா மக நானு. நாங்கள்ளாம் ஒரே ஊரு... ஒரே பள்ளிக்கூடம் சொந்தமாறதுக்கு முன்னா டியே ஒருத்தரையொருத்தர் நல்லா தெரியும். பகவதி அக்காதான் எங்களுக்கெல்லாம் லீடர். லீடர்ன்னு கூப்புடறதுக்கு பதிலா அக் கான்னு கூப்படலாம். கூடை முடையறது.. கோலம் போடறது... கறிக்குழம்பு ஆக்கறது... கத்திரிக்கா வதக்கறதுன்னு நிறைய சொல்லித் தருவாங்க. எங்க செட்டுல இருக்கற எந்த பொண்ணும் வேலை தெரியாத விவரங் கெட்டத்தனமா இருக்கக் கூடாதுன்னு பாத்துப்பாத்து கத்துக் குடுப்பாங்க. அக்கா குழம்புவைக்கச் சொல்லிக் குடுத்த பொண் ணுங்கள்ளாம் பல்வேறு இடங்கள்ள கல் யாணமாகி ரொம்ப சௌக்யமா இருக்காங்க. அந்த குரூப்ல அப்போ தாவணி போடாதவ நான்தான். நான் தாவணி போட்ட மறு மாசம் அக்கா கல்யாணமாகிப் போச்சு. அக்காவுக்கு நான் லெட்டர் எழுதிருந்தேன். துக்கம் விசாரிச்சு. அக்கா மறு தபால்லயே வேறு ஒண்ணும் வேலையில்லேன்னா என் கூட வந்து ரெண்டுமாசம் இருடின்னு பதில் போட்டாங்க. தனக்கு எத்தினி துக்கம் இருந் தாலும் பிறத்தியாருக்கு உதவி செய்யறதுல அக்கா மாதிரி யாரும் இருக்க மாட்டாங்க. 'போடி. மெட்டுக்கு வந்து யாரைக் கேட்டா லும் நம்ம எஸ்டேட்டுக்கு வழி சொல்வாங்க. கையோட கூட்டிட்டு வந்து வுடுவாங்க'ன்னு அக்கா சொன்னாங்க. பஸ்ல இருக்கவங் களும் நாச்சியப்ப செட்டியார் கார் போவுது. மழைல மாட்டாதன்னு இறக்கி வுட்டாங்க. நீ என்னாடான்னா மனுஷத்தன்மையே இல்லாத இறங்குன்ற..."

"போறும். கூட்டிட்டுப் போறேன்." கதி ரேசன் விளக்குகளைப் போட்டுப் பார்த்துக் கொண்டான். கார் இன்ஜினை விரைவு படுத்திக் குறைத்துக் கொண்டான். மெல்ல கியர் மாற்றி வண்டியை மலைப் பாதையில் நிதானமாய்ச் செலுத்தினான்.

"உங்க பேரு என்னா? அந்த பெண் மணி கேட்டாள்.

"கதிரேசன்."

"எத்தினி நாளா எஸ்டேட்ல வேலை செய்றீங்க."

"வேலையா?" கதிரேசன் யோசித்தான். ஏலக்காய் பற்றிய ஞானம் ஓரளவு முழுமை யடைந்தது போன வருடம்தான். எனவே சொல்வதாயிருந்தால் ஒரு வருட சர்வீஸ் என்று சொல்ல வேண்டும்" ஒரு வருஷமா வேலை செய்யறேன்."

"சம்பளத்துக்கு ஓட்டறீங்களா, இல்ல வெறும் சாப்பாடு மட்டுமா?"

என்ன கேட்கிறது இந்த சனியன். காசு தராமல் இரண்டு வேளை சோற்றுக்கு மட்டும் வேலை செய்யுமளவு இந்திய தொழி லாளியின் நிலை தாழ்ந்து விட்டதா? இல்லை எதுவுமே தெரியாத முட்டாளாய் இது இருக் கிறதா?"

"எதுக்கு கேட்டேன்னா எங்க ஊர்ல வண்டி ஓட்டறவங்களுக்குச் சாப்பாடு போட்டு வச்சுக்குவாங்க. மாட்டுக்கும் பருத்திக் கொட்டைப் புண்ணாக்கு குடுத்துரு வாங்க.... இங்கன ஏலக்கா பறிக்கறவங்களுக் கும் வீடு குடுத்து, சாப்பாடு போடறதா கேள்விப்பட்டேன். உனக்கும் அப்படித்தா னான்னு கேட்டேன்."

"உனக்கு எந்த ஊரு?" கதிரேசன் அடிக் குரலில் கேட்டான்.

"நாகர்கோயில் பக்கம். குமாரகோயில்."

"நாட்டுப்புறமா?"

"டவுன்லேர்ந்து கிட்டக்கத்தான்."

"நீ இப்படி சோத்துக்குதான் வேலை செஞ்சுக்கிட்டிருந்தியா?"

"நான் ஏன் சோத்துக்கு வேலை செய்ய ணும். எங்க வூட்ல நாலுபேர் சோத்துக்கு வேலை செய்யறாங்க. அங்க எங்களுக்கு நிலமும் இருக்கு. மலையும் இருக்கு."

"மலையா?"

"ஆமா மலைல கொய்யா போட்டுருக் கோம். நாரத்த போட்டுருக்கம். நாகப்பழம் போட்டுருக்கம். நாங்க ஒண்ணும் சோத்துக்கு வேலை செய்யறவங்க இல்ல. கொஞ்சம் காரோட்ட தெரிஞ்சா பெரிய ஜட்ஜுன்னு நினைப்பாக்கும். ஆள் பாத்துப் பேசத் தெரிஞ்சுக்கங்க."

கதிரேசனுக்கு என்ன பேசுவது என்று தெரியவில்லை. தடால் புடால் என்று ஒரு பெண் பேசுகிறபோது அவளுக்கு ஏற்ப அவள் பேசுகின்ற குரலிலேயே எதிர்த்துப் பேசுவது அனாவசியம் என்று தோன்றியது. இந்தப் பசுமாட்டைக் கொஞ்சம் விட்டுப் பிடிக்க வேண்டும். ஏன் இவளைப் பசுமாடு

"நம்ம நாட்டு அரசியல் இவ்வளவு மோசமா போகும்னு நினைக்கவேயில்லை."

"நினைச்சிருந்தா என்ன பண்ணியிருப் பீங்க?"

"நானும் அரசியல்ல குதிச்சிருப்பேனே!"

- அரிசி ஸ்ரீராம்

என்று யோசித்தோம்.... கதிரேசன் தனக்குள் ஆராய்ந்தான். உடம்பு மாடு உடம்பு. ஒரு புண்ணாக்கு வாசனை. கிட்டே போனால் மணி குலுங்க மாடு ஒரு கோபத்தில் தலை யாட்டுமே. அந்த மாதிரிதான் இவள் கோப மும் பேச்சும் இருக்கிறது.

"யம்மா... நீங்க யாருன்னு தெரியாத பேசிட்டேன். நம்மளைப் போட்டுக் குடுத் திராதீங்கம்மா..." கதிரேசன் பொய்ப் பணி வுடன் பேசினான்.

"ச்சே... ச்சே.... அதெல்லாம் போட்டுக் குடுக்க மாட்டேன். ஆனாலும் டக்குன்னு ஒரு லேடிய மழைல இறங்கிப் போகச் சொன்னீங்க பாருங்க... அதான் புடிக்கலை."

'நீ லேடியா? பசுமாடு...! எஸ்டேட்டுக்கு வா. உன்னைக் கவனிச்சுக்கறேன்' கதிரேசன் நெஞ்சுக்குள் ஒரு குதூகலம் வழிந்தது.

"ம்மமேமே..." கதிரேசன் திடீரென்று மாடு மாதிரி கத்தினான்.

"என்ன பண்றீங்க?"

"ரொம்ப சந்தோஷமானா இப்படி கத்து வேன்."

"இப்ப என்ன கேடு புடிச்சுக்கிச்சு உன் சந்தோஷத்துக்கு?" அவள் சிடுசிடுத்தாள்.

"நீ சமைச்சுப் போடறதுக்குப் போற.... நான் டைவரு... உன் கூட சமாதானமா போயிட்டா நல்லா சோறு வடிச்சுப் போடுவ... கூட பதார்த்தம் வைப்ப... எனக்கு சம்பளம்தான். இருந்தாலும் எஸ்டேட்ல அப்பப்ப சாப்பிட்டுக்குவேன். நம்மளைக் கவனிச்சுக்கம்மா" கதிரேசன் கண் சிமிட்டி னான்.

சொர்ணலட்சுமி அவனை முறைத்து விட்டு, பின்னலை சீட்டுக்குப் பின்னே தள்ளி கையைப் பக்க வாட்டில் போட்டு பாதி முதுகை கார் கதவின் மீதும் பாதி முதுகு கார் பின் சீட்டின் மீதும் அழுந்த உட்கார்ந்து கொண்டாள். அவள் உட்கார்ந்த விதம் பல கார்களுக்குச் சொந்தமானவள் என்பது போல் இருந்தது. "இந்த கார் ஏஸியா?" அவள் டேஷ்போர்டில் இருக்கிற சில பட்டன்களைத் தொட்டாள்.

"மலைல ஓடற காரை பைத்தியக்காரன் தான் ஏஸி பண்ணுவான்."

"அடேயப்பா... இவரு புத்திக் கொழுந்து. டிரைவரா இருக்கும் போதே இத்தினி ஆங்காரப்படறீங்களே.... தடுக்கின மாதிரி எங்கினயாச்சும் துட்டு கிடைச்ச எஸ்டேட் இஸ்டேட் வாங்கிட்டீங்க. உங்களைக் கைல புடிக்க முடியாது."

"இப்படியே காலம் போயிடுமா... நாங்க எஸ்டேட்டும் வாங்குவோம். இஸ்டேட்டும் வாங்குவோம்."

அவன் அழுத்தம் கொடுத்துப் பேசியது அவளுக்குப் புரியவில்லை. வெறும் கர்வம் என்பதாய்த்தான் அவள் எடுத்துக் கொண் டாள்.

வெகுளியாய் இருக்கும் பெண்ணைக் கண்டால் நல்ல ஆண்மகனுக்கு இரக்கம் வந்துவிடும். கதிரேசன் நல்லவன். சட் டென்று ஒரு பெண்ணை மறைமுகமான பேச்சால் கீழ்த்தரமாய் நடத்தியது கண்டு வெட்கப்பட்டான். அவளுக்கு அது புரிய வில்லை என்றதும் சந்தோஷப்பட்டான். அவளை வேறுவிதமாய்க் கேலி செய்ய, கலவரமூட்ட, விரும்பினான்.

தார் சாலையிலிருந்து மண் சாலைக்கு மாறிய வண்டி அதிகம் குலுங்கியது. வண்டி வேகமாய் ஒருமுறை குலுங்கும் போது பளிச் சென்று ஸ்டியரிங்கை வலப்பக்கம் வளைக்க, அவள் தன் மீது வந்து விழுவாள் என்று எதிர் பார்த்தான். அவள் வலது சரிந்து அவன் மீது படாதவாறு கை ஊன்றி எதிர்த்து இடது பக்கம் போனாள். அவள் முதுகு கதவின் மீது மோத, கதவு திறந்து கொண்டது. அவள் அப்படியே வெளியே சேற்றில் விழுந்தாள். உருண்டு சரிவில் இறங்கினாள். பயத்தில் 'ஐயோ' என்று அலறினாள்.

மழை கனமாய்ப் பெய்தது. கதிரேசன் வண்டியை நிறுத்திவிட்டு அவள் விழுந்த இடத்துக்கு ஓடினான். உட்கார்ந்து கையும் காலும் அழுந்த ஊன்றி, சரசரவென்று சரிவில் சறுக்கினான். ஒரு அடி உயரம் வளர்ந்திருந்த புல்லில் அவள் எங்கு கிடக் கிறாள் என்று தேடினான். நாற்பது அடிக்குக் கீழே ஓர் ஏலக்காய் புதரில் அவள் கால் வைத்துப் படுத்திருந்தாள்.

"மாட்டு வண்டிக்காரன்தானே நீ..." அவள் ஒருக்களித்து அவனைப் பார்த்துக் கத்தினாள். அத்தனை நெருக்கமாய் ஒரு கட்டழகு கதிரேசனைத் தாக்கி பதில் பேச ஒட்டாமல் செய்தது.

இப்போது காருக்குப் போக வேண்டு மெனில் ஒருவரையொருவர் பிடித்துக் கொண்டுதான் போக முடியும். இந்தப் பசுமாடு கத்துகிறது. இதை முதலில் சமா தானம் செய்ய வேண்டும். பெண்களைச் சமாதானம் செய்ய முதலில் தாழ்ந்து போக வேண்டும்.

"என்னை மன்னிச்சிருங்கம்மா" கதி ரேசன் கைகூப்பினான். ஏனோ அவனுக்குச் சிரிப்பு வந்தது.

அந்த சிரிப்பைப் பொறுக்கித்தனம் என்று எடுத்துக் கொண்டாள்.

(தொடரும்)



# கல்யாணி

இரா. முருகன்

சொக்கலிங்க ஓதுவாருக்கு இரண்டு பேர் மேல் அசாத்தியக் கோபம்.

பரமசிவம் என்று ஒரு பேர்வழி. கைலாசத்தில் இருக்கப்பட்டவர். அப்பரோ சம்பந்தரோ பாடாத சின்னக் கோயிலில் காசிநாத சாமியாக, உச்சிக்கால பூஜைக்கு, சுயம்பாகி பித்தளைப் பாத்திரத்தில் வைத்துப் படைக்கிற பட்டைச் சோற்றுக்காகப் பழியாகக் கிடப்பவர். அந்தப் பிரசாதச் சோறு ஓதுவாருக்குத்தான் வரும்.

சுயம்பாகி இன்றைக்கு மட்டம் போட்டு விட்டான்.

"ஓதுவாரே.. நாளைக்கு ரெண்டு பட்டையாச் சேத்து வாங்கிண்டு போம்...."

ராஜப்பா குருக்கள் கோயிலைப் பூட்டி சாவியை இடுப்பில் செருகிக் கொண்டு சைக்கிள் ஏறிப்போய் ஒரு மணி நேரமாகிறது.

"என் சோத்துலேயும் மண்ணைப் போட்டுட்டீரே... நியாயமா?"

கோபுரத்தை அண்ணாந்து பார்த்துச் சொன்னார் ஓதுவார். அங்கே தடிதடியாக வயிற்றைத் தள்ளிக் கொண்டு உட்கார்ந்திருந்த கிங்கர உருவங்களைப் பார்க்கவே பற்றிக் கொண்டு வந்தது அவருக்கு.

'எல்லாப் பயகளும் தர்மகர்த்தா ஜாடை.. எச்சக் கையால காக்கா ஓட்டாதவன் எல்லாம் தர்மகர்த்தா.. நல்லாத்தான் படைச்சீர்....'

பரமசிவம் எப்படியோ போகட்டும்... இந்த மெய்யம்மைக்கு என்ன கேடு?

"தம்பி மகளுக்குப் பிரசவம்னு காயிதம் போட்டிருக்கா... போய்ட்டு ரெண்டே நாள்லே வந்துடறேன்... கடைக்குட்டிப் புள்ளே... பாவம்."

வீட்டுக்காரி மெய்யம்மை நார்ப்பையோடு கிளம்பிப் போய் ஒரு வாரமாகிறது.

"கணங்கிட வேணாம்.... அப்புறம் எனக்கு சோத்துக்கு ததிங்கிணத்தோமாயிடும்..."

பஸ் ஸ்டாண்டில், திண்டுக்கல்லுக்கு அவளைப் பஸ் ஏற்றி விட்டபொழுது படித்துப் படித்துச் சொன்னார்.

"ரெண்டு நாள் தானே.. கருகப்பிலைக் கட்டி இடிச்சு வச்சுருக்கேன்.... கோயில்லேருந்து கொண்டாற சோத்திலே பெணைஞ்சுக்கிட்டு சாப்பிடுங்க... ராத்திரிக்குக் கம்பு மாவு இருக்கு.. ஒரு கையள்ளிப் போட்டு, வெள்ளித் தண்ணி ஊத்தி...."

நேற்றுப் பகல் வரை ஒரு மாதிரி தள்ளி விட்டார்.

உப்பும் உறைப்புமாகப் பத்தியச் சோறு. தெரு முக்கில் நாராயணன் கடையில் இருபத்தைந்து பைசாவுக்கு ஒரு குவளை மோர். ராத்திரி கம்பங்களி. காளாஞ்சியில் வருகிற வாழைப்பழம். விபூதியும் கற்பூரமும் மணக்கிற சருகு வெற்றிலை. கம்பங்களி நேற்று ராத்திரியே ஒரு கரண்டிதான் வந்தது. அரை மூடி தேங்காய் இருந்ததைத் துருவிப் போட்டு, வெல்லத்தைத் தேடி எடுத்துப் பிசைந்து சாப்பிட்டு ஒப்பேற்றிவிட்டுப் படுத்தபோது மெய்யம்மையை ஒரு பாட்டம் வைது தீர்த்தார்.

"கட்டினவனை விடக் கிழவிக்குக் கூடப் பிறந்தவன் மேலாயிடுச்சு... கடைசித் தம்பி... அவனோட கடைசிப் பொண்ணு.... எத்தனையின்னு பிரசவ லேகியம் இடிச்சுத் தரது...."

எத்தனை பேருக்கு ஓடியாடி ஒத்தாசை செய்து பிரசவம் நல்லபடியாக முடித்துக் கொடுத்து என்ன... மெய்யம்மைக்கு வெறும் வயிறு என்று விதித்தது.

பரமசிவம் மேல் திரும்பவும் கோபம் வந்தது ஓதுவாருக்கு.

"ஒரு பையனைக் கொடுத்திருந்தீர்னா உக்காரவச்சுக் கஞ்சி ஊத்துவான்... பொண்ணா இருந்தாத்தான் என்ன.. வயிறு வாட விட்டுடுவானா இப்படி...."

நூல் பிடித்தது போல நேராகக் கிடக்கிற தெரு. இந்த ஓரம் சிவன் கோயில். அங்கே பள்ளி கொண்ட பெருமாள்.

பெருமாள் கோயிலைப் பார்த்ததுமே ஓதுவாருக்கு நாக்கில் நீர் ஊறியது.

'பட்டாச்சாரி அய்யங்கார்சாமி வேளா வேளைக்குப் புளியோதரையும், தயிர் சாதமும், அக்காரவடிசிலுமாப் படைக்கப் படைக்கப் படுத்துக்கிட்டுக் கிடக்கற சாமி... நமக்கு என்ன பிரயோசனம்.. சிவனுக்குத்

தான் ஓதுவாரும் தேவாரமும்... அங்கே அய்யங்காரே இழுத்து இழுத்துப் பாசுரம் பாடிட்டுக் கொண்டு வந்ததை எவர்சில்வர் தூக்கிலே எலையைப் போட்டு மூடி எடுத்துட்டுப் போயிடுவார்....'

பட்டாச்சாரியாரைப் பார்த்து க்ஷேம லாபம் விசாரிக்கிற சாக்கில் ஏதாவது கிடைக்குமா என்று பார்த்தால் என்ன?

பக்கத்து பெண்கள் பள்ளிக்கூடத்தில் மணியடிக்கிற சத்தம். மத்தியான இடைவேளையாக இருக்கும். மதிய உணவுக் கூடத்தில் சோறு பொங்குகிற புகை.

"ஓதுவாரே... உம்மைத்தான் நினைச்சேன். ஆதிமூலமேங்கறதுக்கு முன்னே வந்து நிக்கறீர்."

பட்டாச்சாரியார் தூணில் முதுகைச் சொறிந்தபடி, ஒரு பழைய புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தார்.

நைவேத்தியம் எல்லாம் முடிந்திருக்குமோ...

''ஒரு பத்து வில்வ இலை வேணுமேய்யா... ஒரு மருந்துக்குத் தேவைப்படறது... உம்ம நந்தவனத்துலே பறிச்சு வந்து

# ஒருங்கு

தாருமே...."

பட்டாச்சாரியார். இலை பறிக்கக் கூட சிவன் கோயிலுக்குள் நுழைய மாட்டார்.

''உக்காரும்... பெரிய வாச்சான் பிள்ளை வியாக்யானம் கேளும்... வானால் அறுத்துச் சுடினும் மருத்துவன் பால்...."

திராவிட வேதத்தில் இளைக்க முடியாமல் பசி ஏறிக் கொண்டிருந்தது ஓதுவாருக்கு. 'தொப்' என்று பட்டாச்சாரியார் மடியில் ஒரு பந்து வந்து விழுந்தது. இரண்டு நிமிடம் கழித்து ஒரு பெண் குழந்தை சிருடையில் அரக்கப் பரக்க ஓடி வருவதைப் பார்த்துவிட்டு, பட்டாச்சாரியார் பந்தோடு எழுந்தார்.

"பந்தார்விரலி உன்மைத்துனன் பெயர் பாட செந்தாமரைக் கையால்...."

பாடிக்கொண்டே பந்தைக் கொடுக்கிற பட்டாச்சாரியார். கலகலவென்று சிரிப்பைச் சிந்தி ஓடுகிற குழந்தை....

"உடையவர் உகந்த பாசுரமய்யா...."

பட்டாச்சாரியார் பாசுரத்தை விட்டு இறங்க மாட்டேன் என்கிறார்.

"பூஜை எல்லாம் முடிஞ்சாச்சு போல இருக்கு...."

ஓதுவார் ஜாக்கிரதையாக விசாரித்தார். வருகிற பதிலை வைத்து அடுத்த கேள்வியை யோசிக்கலாம்....

''அதை ஏன் கேக்கறீர்? இங்கேதான் டிரஸ்ட் நிர்வாகம்னு தெரியுமே.... முக்யஸ்தர் வக்கில் ஆராமுதய்யங்கார் போன



மாசம் போய்ச் சேர்ந்தாரா... ஒரே சண்டை... சச்சரவு... கோர்ட்டுக்குப் போக ரெடியாயிண்டு இருக்கா... இவா விவகாரத்துலே பெருமாளைப் பட்டினி போட்டுட்டா... சேவார்த்திகள் கொடுக்கறதை வச்சுத்தான் ஓடிண்டு இருக்கு... பாரும்... பள்ளிக்கூட எட்மாஸ்டர் ததியோன்னம் நேவித்யம் பண்ண வரேன்னார்... ஆளையே காணோம்... உம்ம பாடு தேவலை..."

'பரமசிவம் பாடு உம்மைவிட ஒருபடி மேலே தான்....'

பெருமாளைப் பார்த்துக் கும்பிடு போட்டுவிட்டு ஓதுவார் வெளியே வந்தார்.

காலியாகக் கிடந்த வயிறு பொருமிப் பசி யேப்பமாக வெளியேற்றிக் கொண்டு இருந்தது. கையில் இருந்த பணத்தை எல்லாம் மெய்யம்மையிடம் கொடுத்து அனுப்பியிருக்கக் கூடாது. ஒரு பத்து ரூபாயை நிறுத்திக் கொண்டிருந்தால் இன்றைக்குப் பாடு கவலையில்லாமல் போயிருக்கும்....

'கண்ணை மூடிட்டு நடக்க வேண்டியது... யாராவது ஓதுவாரேன்னு கூப்பிட்டா நின்னு ஒரு அஞ்சு ரூபா கடன் கேக்க வேண்டியது... யாரா இருந்தாலும் சரிதான்...'

என்ன பைத்தியக்கார யோசனை என்று சிரிப்பு வந்தது. மண்ணில் வந்து விழுந்த இந்த ஐம்பத்திரண்டு வருடத்தில் ஒரு பிள்ளையிடமும் ஒரு நயாபைசா கடன் என்று தலையைச் சொறிந்து கொண்டு நின்றதில்லை. இப்போது இந்தக் கேடு கெட்ட வயிற்றுக்காக....

'அப்ப இன்னொரு குவளை ஊருணித் தண்ணியைக் குடிச்சுட்டுக் கெட' என்று வயிறு எகத்தாளம் பண்ணியது.

உதயத்திலும் உச்சிக் காலத்திலும் சாமி புறப்பாட்டுக்கும் தாளம் தட்டிக் கொண்டு பாட தேவாரம் முழுக்கத் தெரிந்து என்ன... தனியாகப் பாடி உருகத் திருவிருத்தமும் திருச்சாழலும் மார்கழியில் பரிவட்டம் கட்டிக் கொண்டு சங்கும் சேகண்டியும் ஒலிக்கப் பாடத் திருவெம்பாவையும் திருப்பள்ளி எழுச்சியும் நாக்கிலும் மனசிலும் அழிக்க முடியாமல் படிந்து என்ன... சோறு போடு என்று யாரையும் கேட்க வாயில் வார்த்தை இல்லை...

வள்ளலார் மாதிரி வெள்ளை போர்த்திய பிராமணக் கிழவியம்மாள் எச்சில் இலையைத் தெருவில் எறிந்து விட்டுப் போகிறது பார்வையில் பட்டது.

'இந்தம்மாவை நிறுத்தி ஒரு அருட்பா சொல்லி அன்னம் கேட்டா... என்ன பாட்டு... தனித்தனி முக்கனி பிழிந்து வடித்

தொன்றாய்க் கூட்டி... முக்கனியைப் பிழிவா னேன்.... நாலு வாழைப்பழம்... நாலு பலாச் சுளை... ரெண்டு மல்கோவா....

"என்ன ஓதுவாரய்யா.... நிலாக்காயுதா?"

வாயில் வெற்றிலை குதப்பிக் கொண்டு யாரோ விசாரிக்கிறார்கள். கண் மங்கிக் கொண்டு வருகிறது. நாயனக்கார வடிவேலு குரல் இல்லையா இது.....

"என்ன வடிவேலுப் பிள்ளையார் எங்கே போய்ட்டு வராப்பிலே."

"பிள்ளையாரா... இந்த எடக்குத்தானே வேணாங்கறது..."

"பிள்ளைவாள் எங்கேருந்து வரார்னு தெரிஞ்சுக்கலாம்னு ஒரு ஆர்வம்தான்."

"வேறே எங்கே... நம்ப தங்கராகப் பத்தர் வீட்டுலே மகளுக்கு வளைகாப்பு... காலை யிலே கோயிலுக்குக் கூட அதான் வரலை...."

வடிவேலு கையில் சந்தனம் மணத்தது. சாப்பிட்ட தெம்பில் ஏறி ஒலிக்கும் குரல்.

"பத்தர் வீடு இந்தப் பக்கம்தானா?"

சுவாரசியம் எதுவும் குரலில் தலைகாட் டாமல் பார்த்துக் கொண்டு விசாரித்தார் ஓதுவார்.

தங்கராகப் பத்தர் எப்போதாவது கோயி லுக்கு வருவார். வடிவேலு நாயனத்தை மடியில் வைத்துக் கொண்டு மணிக் கணக் காக அவரோடு பேசியபடி இருக்க, குறுக்கே நெடுக்கே நடந்து போய்க் கண்ணில் பட்ட அளவில்தான் ஓதுவாருக்குப் பழக்கம்.

ஆனாலும் என்ன... படியேறிப் போனால் முகத்தைத் திருப்பிக் கொண்டு விடுவாரா...

"தெருக்கோடியிலே வாழை மரம் கட்டி இருக்கு பாரும்... ஒரு அம்மா கூடத் தண் ணிப் பானையோட உள்ளே போறாங்களே... அதான் வீடு..."

வடிவேலு காட்டி விட்டுப் போன திசைக்குக் கால் தன் பாட்டில் இழுத்தது. பூக்கூடையோடு ஒரு பையன் அந்த வீட்டிற் குள் அவசரமாக நுழைந்து கொண்டிருந் தான்.

"போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவார் அவர் பின் புகுவீர்..."

வாய்க்குள் பாடிக் கொண்டே ஓதுவாரும் உள்ளே புகுந்தார்.

'விசேஷம் நடக்கிற வீடு மாதிரித் தெரியலியே... வீடு மாத்தி வந்திட்டோமா....'

திரும்பி விடலாமா என்று யோசித்துக் கொண்டிருந்த பொழுது, உள்ளே இருந்து பலமாக ஒரு குரல்....

"சொக்கலிங்க ஓதுவாரே... வாரும்.... வாரும்... பாத்து எத்தனை நாளாச்சு...."

'தங்கராகப் பத்தரா கூப்பிடறது... அது என்ன காலேயரைக்கால் மரியாதை... வாங் கன்னு கூப்பிட்டா என்னவாம்... சரி நாம ளாத் தானே வந்தது...'

நடுக்கூடத்தில் ஜமுக்காளம் விரித்து நாலைந்து பேர் உட்கார்ந்திருந்தார்கள். முகத் தில் ஒரு சிரிப்பை வரவழைத்துக் கொண்டு அந்தப் பக்கம் போனார் ஓதுவார்.

"இல்லே... இப்படி வந்துட்டு இருந்தேன்.. வீட்டுக்காரி சொன்னது ஞாபகம் வந்தது... வயசாகிக் காது தொங்கிப் போயிடுச்சா... தோடு போடக் கஷ்டமா இருக்கு... அழிச்சு ரெண்டு மோதரம் பண்ணலாம்னா... கைக் குள்ளே அடங்கற செலவுன்னா விசாரிக் கலாமேன்னுதான்... வேலையா இருக்கீங்க போலே இருக்கு... அப்புறமா சாவகாசமா ஒருநாள் வரட்டா...."

பந்தி போஜனம் நடக்கிற, நடந்த சுவடே தெரியவில்லை.....



"ஜலதோஷத்தால ரொம்ப அவஸ்தை படுறேன். மருந்து தாருங்க வைத்தியரே."

"அரண்மனைப் பக்கம் கொஞ்ச நாளைக்குத் தலை வச்சி படுக்கக் கூடா துன்னு ஆஸ்தான புலவருக்கு ஆணை இடுங்கள் மன்னவா!"

— கஸ்தூரி குரலோன்

"அட வாருமய்யா.... உம்ம வியா பாரத்தை எல்லாம் சம்பந்திகிட்டே அப் புறமா வந்து பேசிக்கலாம்... நான் யாருன்னு தெரியுதா... சொல்லும்...."

நடுநாயகமாக உட்கார்ந்திருந்த நரைத்த மீசைக்காரரை எங்கேயோ பார்த்த நினைவு.

சட்டென்று நினைவு வந்தது.

"ஐயா கொக்கரகுளத்துலே வக்கீல்....."

"நல்ல ஞாபக சக்தி ஐயா... என்னை மாதிரி... பாத்து இருபது வருஷம் ஆகி யிருக்குமா... ஆறு முகத்தா பிள்ளை வீட்டுச் சடங்குலே மீனாட்சி கல்யாணம் சொன் னீரே.... காதுலேயே நிக்குது. இப்பவும் கதை யெல்லாம் சொல்றீரா?"

திருநெல்வேலிப் பக்கம் எந்தப் பெரிய

மனிதர் வீட்டு விசேஷம் என்றாலும் ஒரு மணி நேரமாவது சொக்கலிங்க ஓதுவார் திரு விளையாடல் புராணம் சொல்லுவார். அது ஒரு காலம்.....

இப்போதெல்லாம் மைக்செட் காலம்.... வாடகை வீடியோ காலம்....

இந்த ஊருக்குத் தெரிந்த சொக்கலிங்க ஓதுவார் 'நமச்சிவாய வாழ்க... நாதன் தாள் வாழ்க....' என்று கோயிலில் வௌவால் தூங்குகிற மூலையில் உட்கார்ந்து பாடுகிறவர். 'திருச்சிற்றம்பலம்' என்று சொல்லித் தாளத்தைக் கண்ணில் ஒத்திக் கொண்டு முடிக்கும் போது, 'சிவசிதம்பரம்' என்று பின்மொழியக் கூட ஒரு ஜீவன் பக்கத்தில் நிற்பதில்லை...

"ஓதுவார் கதையெல்லாம் சொல்லுவாரா... தெரியாமப் போச்சே!"

தங்கராசுப் பத்தர் முடிக்கும் முன் வக்கீல் சம்பந்தி, ஓதுவாரைக் கையைப் பிடித்து ஜமுக்காளத்தில் இருத்தி விட்டார்.

"வந்தது வந்தீர்... கொஞ்சம் மீனாட்சி கல்யாணம் சொல்லுமய்யா... குண்டோதரன் சாப்பிட்டது... வைகை ஆறு பேர் வந்தது, உம்ம குரல்லே கேக்கணும்...."

"சொல்லுங்க.... சொல்லுங்க...."

கூட இருந்தவர்கள் வெகு உற்சாகமாகச் சொன்னார்கள். சமையல் கட்டிலிருந்து பெண்களும் வெளியே வந்து கூடத்தில் ஓரமாக உட்கார்ந்தார்கள்.

சொல்லாமல் விடமாட்டார்கள்... சாப்பாடு.....

ஓதுவார் தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

"தென்னாடுடைய சிவனே போற்றி...."

கம்பீரமாக ஆரம்பித்தார்.

தடாதகை பிராட்டியைக் கைப்பிடிக்க சோமசுந்தரர் வருகிறார். பூத கணங்களின் ஆரவாரம். வீதியுலா. பிரான் மீது வைத்த கண்ணை எடுக்காமல் லயித்துப் போன பிராட்டி. முப்பத்து முக்கோடி தேவரும் வந்த திருக்கல்யாணம். விருந்து.

பத்து வகை இனிப்பு, நெய் மூடிய சோறு... புளிப்புக் கறிகள்... உறைப்புக் கறிகள், கைப்புக் கறிகள், துவர்ப்புக் கறிகள், புலவுச் சோறு, அக்கார அடிசில், 'வெண்பொங்கல், முழுமதி போல வெள்ளைப் பணியாரம்... மான் கண் போல மாவடு... கெட்டித் தயிர். பெரிய்ய தலைவாழை இலை. நடந்து நடந்து தான் சாப்பிட வேண்டும். அத்தனை நீளம்... எல்லார் வயிறும் நிறைந்து போகிறது... போதும் போதும் வேண்டாம்... போட வேண்டாம் என்று மன்றாடுகிறார்கள். விடாமல் பரிமாறிக் கொண்டு போகிறார்கள். சமைத்தது மிஞ்சி விடுகிறது. பரமசிவன் குண்டோதரனைக் கூப்பிடுகிறார்.

ஓதுவாரின் குரலில் எல்லாமே விரிந்தது. "சபாஷ்... ஆஹா...." என்று வாய்விட்டுச் சிலாகித்தபடி வெற்றிலையில் சுண்ணாம்பு தடவிக் கொண்டிருந்தார் வக்கீலய்யா.

"ஒரு குவளை மோர் சாப்பிடறீங்களா?" முடித்த போது பத்தர் மரியாதையாக விசாரித்தார். ஓதுவார் வயிற்றில் சாப்பாடு என்று இறங்க இனிமேல் இடம் இருக்காது என்று நினைத்திருக்கலாம் அவர்.

"மோரு ரொம்பப் புளிச்சது சம்பந்தி... வேணாம்... சில்லுனு வேறே ஏதாவது இருந்தா ஓதுவாருக்குக் கொண்டு வரச் சொல்லுங்க."

வக்கீல் ஓதுவாரின் கையைப் பிடித்துக் கொண்டு பிரியமாகச் சொன்னார்.

"வேணாம் வக்கீலய்யா... வயிறு நிறைஞ்சு இருக்கு... வரட்டுமா?"

ஓதுவார் வெளியே இறங்கிக் கொண்டிருந்தார்.

---

**பிராகா** என்னும் நகரம் முதலில் ஆஸ்திரியாவில் இருந்தது. பிறகு அது செக்கோஸ்லோவேக்கியா நாட்டின் தலைநகராக மாறிற்று. செக்கோஸ்லோவேக்கியாவை ஹிட்லர் கைப்பற்றியதும் பிராகா ஒரு ஜெர்மன் நகரம் ஆயிற்று. இதைக் குறித்து வேடிக்கையாகப் பின்வரும் கதை சொல்லப்படுகிறது:



பிராகாவில் வாழ்ந்த ஒரு மனிதனின் கல்லறைக் கல்லில் பின்வருமாறு எழுதப் பட்டிருக்கிறதாம்.

'இதில் அடக்கம் செய்யப்பட்டிருக்கும் ஜோஸப் என்பவர், ஆஸ்திரியாவில் பிறந்து, செக்கோஸ்லோவேக்கியாவில் வாழ்ந்து, ஜெர்மனியில் இறந்தார். ஆனால் தன் சொந்த ஊராகிய பிராகாவை விட்டு எங்கும் போகவே இல்லை!'

— இரத்தினம்



இந்தியில் டப் செய்யப்பட்டுள்ளது 'காதலன்' படம். விளம்பரங்களில், 'ஜென்டில்மேன் கேடி. குஞ்சுமோன் அளிக்கும்' என்ற வாசகமும் மற்ற கலைஞர்கள் பெயர்களும் கொட்டை எழுத்தில் இருக்க, டைரக்ஷன்: சங்கர் என்பது மட்டும் ஓரத்தில் சிறிய எழுத்துக்களில் உள்ளது.

ஆதாரம் : ஸ்கிரீன்,
தகவல் :- ஆலன்





# கடவுள்
## கவனித்துக் கொண்டிருக்கிறார்!

கண் புற உலகத்தைப் பார்க்கிறது,
மனம் கண்ணைப் பார்க்கிறது.
அந்தராத்மா மனத்தைப் பார்க்கிறது,
இது உண்மை; மாற்ற முடியாத உண்மை
மனசாட்சிக்கு ஏற்ப நாங்கள் சுத்தமான
ருசிகரமான இனிப்பு மற்றும் கார
வகைகளைத் தயாரிக்கிறோம்.

**இனிப்பு வகைகள்:**

1. மங்களூர் போளி
2. தேங்காய் போளி
3. ரஸ மலாய்
4. ஸோன் பப்டி கேக்
5. மாலாடு ரவாலாடு
6. இனிப்பு ஸோமாஸ்
7. முந்திரி கத்லி
8. கடலை உருண்டை
9. பொரிவிளங்காய் உருண்டை
10. தேங்காய் கோவா
11. அதிரசம்
12. வெல்ல சீடை
13. சூரத்காரி
14. கோதுமை ஹல்வா
15. ரஸகுல்லா
16. குங்குமபூ லட்டு
17. குங்குமபூ பாதம் ஹல்வா
18. குங்குமபூ வீட் ஹல்வா
19. புரூட் ஹல்வா
20. சூரியகலா

**கார வகைகள்:**

1. தட்டை
2. தேன்குழல்
3. கைமுறுக்கு
4. சீடை
5. ஸ்பெஷல் மிக்ஸர்
6. நவரத்ன மிக்ஸர்
7. உருளைக்கிழங்கு சிப்ஸ்
8. வாழைக்காய் சிப்ஸ்
9. வறுபயறு
10. வெஜிடபிள் சமோசா
11. ரயில் கட்டிடம்
12. சீப்புச் சீடை

**பொடி வகைகள்:**

1. கருவேப்பிலைப் பொடி
2. பருப்புப் பொடி
3. இட்லிப் பொடி
4. சாம்பார்ப் பொடி
5. ரசப் பொடி
6. ஊறுகாய் மிளகாய்ப் பொடி

திருமண வைபவங்களுக்கு, பருப்புத் தேங்காய் அதிரசம், திரட்டுப்பால், சீர் முறுக்கு ஆகியவற்றை தயாரித்துக் கொடுக்கிறோம்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

நெ. 24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை - 20

போன் : 4915662 ; 4914213

Ad-Ventures

# பணம் பண்ணலாம் வாங்க!

**Bullish, bearish** என்ற தொடர்களின் அர்த்தம் பற்றிப் போன வாரம் சொன்னேன். Bull அதாவது காளை மாடு போல் திமிறிக் கொண்டு ஓடினால் (முன்னேறினால்) ஷேர் மார்க்கெட் Bullish என்றும்....

கரடி போல் (bear) மந்தமாக நடை போட்டால் bearish என்றும் காரணப் பெயரிட்டு வர்ணிப்பது வழக்கம்.

இப்போது நிலைமை bearishதான்! பங்கு மார்க்கெட்டுக்குப் புதிதாக வந்துள்ள நிறுவனங்கள் தங்கள் ஷேர்களுக்கு அதிக ப்ரீமியம் வைத்து வெளியிட முயன்றன. ஆனால் நிர்ணயித்த தொகையை விட மிகக் குறைவான விலையே அவற்றுக்கு இப்போது மார்க்கெட்டில் கிடைக்கிறது.

உதாரணமாய் ஈஸ்ட் வெஸ்ட் டிராவல்ஸ் என்ற கம்பெனி, பத்து ரூபாய் ஷேரை நாற்பது ரூபாய் என்று ப்ரீமியத்துக்கு விற்க முன்வந்தது. ஆனால் மார்க்கெட்டில் இந்த ஷேருக்குப் பத்தொன்பது ரூபாய்க்கு மேல் கிடைக்கவில்லை. இதே போல்தான் பினானி ஜிங்க், நாச்சம்மை காட்டன் டெக்ஸ்டைல் மில்ஸ், சம்பந்தம் மில்ஸ் போன்ற நிறுவன ஷேர்களும் விலை கிடைக்காமல் தவிக்கின்றன.

ப்ரீமியம் நிர்ணயிக்கும் போது, அந்தந்த நிறுவனத்தின் எதிர்காலச் செயல்பாடு பற்றிய தீர்க்கதரிசனத்துடன் நிர்ணயிப்பது வழக்கம். ஆனால் பல நேரங்களில் பேராசை காரணமாக, ப்ரீமியத்தைத் தேவைக்கதிகமாக உயர்த்தி நிர்ணயிப்பது வழக்கமாகி விட்டது. இந்த விஷயத்தில் SEBI தலையிட வேண்டும்; ப்ரீமியத்தைத் தங்கள் இஷ்டத்துக்கு நிர்ணயிக்கும் உரிமை நிறுவனங்களுக்கு இருக்கக் கூடாது என்று ஒரு நியாயமான வாதம் பலரால் முன்வைக்கப்படுகிறது.

முதலீட்டாளர்களோ, சகட்டுமேனிக்குப் ப்ரீமியம் வைக்கப்படுவதைக் கண்டு சலித்துப் போய் மார்க்கெட்டை 'பாய்காட்' பண்ண ஆரம்பித்து விடுகிறார்கள். இதனால், உண்மையிலேயே மதிப்புள்ள சில நிறுவனங்களின் ஷேர்களுக்குக் கூட கிராக்கி இல்லாமல் போய் விடுகிறது.

இதெல்லாம் ஒரு பக்கம் இருக்கட்டும். IDBI என்று சுருக்கமாக அழைக்கப்படும் Industrial Development Bank of India பற்றி கேள்விப் பட்டிருப்பீங்க. இந்திய தொழில் துறைக்குக் கடனுதவி செய்து வளப்படுத்துவதற்கென்றே ஆரம்பிக்கப்பட்டது IDBI.

வருகிற ஜூலை ஐந்தாம் தேதியன்று IDBI பங்குச் சந்தையில் ஷேர்களை விற்பனைக்குக் கொண்டு வருகிறது. இந்த நிறுவனம் சுமார் 2371 கோடி ரூபாய்க்கு ஷேர்களை விற்பனைக்குக் கொண்டுவரும். ஒவ்வொரு பத்து ரூபாய் ஷேருக்கும் 120 ரூபாய் ப்ரீமியம் வைத்து விற்க இருப்பதால் 130 ரூபாய் கொடுத்துதான் ஒரு ஷேர் வாங்க முடியும்.

இது மிக அதிகப்படியானாலும் இந்த முதலீட்டைத் துணிந்து செய்வதில் பலனிருக்கும்.

"இப்படிச் சொன்னால் போதாது; IDBI ஷேர்கள் வாங்க ஏன் சிபாரிசு செய்றீங்கன்னு விளக்கமாச் சொல்லுங்க" என்கிறார் சிகாமணி.

சொல்றேன். இந்தியாவின் முன்னணி நிதி நிறுவனம் IDBI, தொடங்கப்பட்டு இன்று வரையிலான முப்பது வருடங்களில் 75,000 கோடி ரூபாயைப் பல்வேறு தொழில்களுக்குக் கடனாக இந் நிறுவனம் அளித்திருக்கிறது. மார்ச் '95 முடிய இந்நிறுவனம் அடைந்துள்ள நிகர லாபம் 774 கோடி ரூபாய்! உலகின் மிகப் பெரிய அபிவிருத்தி நிதி நிறுவனங்களுள் IDBI பத்தாவது இடத்தை வகிப்பது பெருமைக்குரிய விஷயமில்லையா? இந்தியத் தொழில்துறைக்கு இது வளர்பிறைப் பருவம் என்பதால் IDBI நிறுவனமும் மேலும் வளர்ச்சியுறப் போவது நிச்சயம்.

பங்குச் சந்தைக்கு வரவிருக்கும் சில தேசியமயமான வங்கிகளையும் சிபாரிசு செய்யலாம். பாங்க் ஆஃப் பரோடா, கார்ப்பரேஷன் பாங்க், சென்ட்ரல் பாங்க் ஆஃப் இந்தியா ஆகியவற்றின் ஷேர்களை வாங்குவது லாபகரமாகவே இருக்கும். இவையெல்லாம் மார்க்கெட் 'கனிந்து வர' காத்திருக்கும் நிறுவனங்கள். ஷேர் வெளியிடுவதற்கான தேதி குறித்த பிறகு இவை பற்றி மீண்டும் நினைவூட்டுகிறேன்.

IDBI ஷேர்களை மட்டுமே தற்சமயத்துக்குச் சிபாரிசு செய்ய முடிகிறது.

(பணம் பெருகும்)



வி. கோபாலன்

# டெபாஸிட்தாரர்கள் ஏன் அனுபவ் அளிக்கும் பின்தேதியிட்ட செக்குகளை பணமாகவே கருதுகிறார்கள்.

**ஒரு டெபாஸிட்தாரர் 2 விஷயங்களில் கவனம் செலுத்துகிறார். பாதுகாப்பு. அதிக ஈட்டுத்தொகை. ஆனால் அவர் ஒரு நிறுவனத்தை நன்கு ஆராய்ந்த பின்பு தான் முதலீடு செய்கிறார்.**

அப்படி அவர் அனுபவ் குரூப்பினை ஆராயும்போது என்ன தெரிந்து கொள்கிறார்? அது தொழில் நிபுணர்களால் நடத்தப்படும் ஒரு குரூப் என்றும் நிர்வாகம் மற்றும் நிதித்துறைகளில் 1000-க்கும் மேற்பட்ட நிபுணர்களைக் கொண்டது என்றும் அறிகிறார். மேலும் அந்த குரூப் நிதிகளை தனது சொந்த, அதிக வருவாய் அளிக்கும் கட்டிடத் திட்டங்களுக்கு பயன்படுத்துகிறது என்றும், அது பல ஆயிரக்கணக்கான வாடிக்கையாளர்களைக் கொண்டது என்றும், சர்வதேச நிறுவனங்கள் அதனுடன் ஒப்பந்தங்கள் செய்ய முன் வந்துள்ளன என்றும் அறிந்து கொள்கிறார்.

முழு திருப்தி அடைந்த டெபாஸிட்தாரர், தான் முதலீடு செய்யக் கருதும் நிறுவனங்களின் பட்டியலில் அனுபவ்-ஐ முதலிடத்தில் வைக்கிறார்.

அதனால்தான் டெபாஸிட்தாரர்களுக்கு அனுபவ்-ன் பின் தேதியிட்ட செக்குகளே பணம் தான். அனுபவ்-உடன் தங்களின் மகிழ்ச்சியான எதிர்காலத்தை திட்டமிடலாம் என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

பாதுகாப்பு மற்றும் அதிக ஈட்டுத்தொகைக்கு உத்திரவாதம் அளிக்கும் அனுபவ் டெபாஸிட் ஸ்கீம் மற்றும் அனுபவ் பாண்ட்-ல் முதலீடு செய்து பயனடைவீர்!

விண்ணப்பப் பத்திரங்கள் மற்றும் ஏனைய விபரங்களுக்கு அணுகவும்.

## அனுபவ் டெபாஸிட் ஸ்கீம்

| குறைந்தபட்ச முதலீடு | வட்டி விகிதம் | |
|---|---|---|
| ரூ. 10,000/- | 24% | 12 மாதங்களுக்கான வட்டி மாதாந்திர பின் தேதியிட்ட செக்குகள் மூலம் முன்னதாகவே தரப்படும். |

## அனுபவ் பாண்ட்

| குறைந்தபட்ச முதலீடு | காலம் | முதிர்ச்சி கால ஈட்டுத்தொகை |
|---|---|---|
| ரூ. 25,000/- | 3 1/2 ஆண்டுகள் | ரூ. 50,000/- (உங்கள் முதலீடு 3 1/2 வருடங்களில் இரட்டிப்பாகிறது) |



**அனுபவ் ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**
**அனுபவ் சென்டர்,**
11, சோமசுந்தரம் தெரு, திநகர், சென்னை-600 017.
ஃபோன்: 8254155 / 8282629 / 8282833 / 8283316 ஃபாக்ஸ்: 8284967

**திறமையுடன் செயலாற்றுகின்றோம். அதிக வட்டி தருகிறோம்.**

● திருச்சி: ஜெனி பிளாசா, ஷாப் எண் - 9, கீழ்தளம், எண்:5, பாரதியார் சாலை, திருச்சி - 620 001. ● கோயம்புத்தூர்: 101, 105 D-B ரோடு, ஆர்.எஸ்.புரம், கோயம்புத்தூர் 641 002. ● சேலம்: சிவா காம்ப்ளெக்ஸ், சாரதா காலேஜ் எதிரில், சேலம் - 636 009. ● மதுரை: 118, இரண்டாவது மாடி, மேற்கு பெருமாள் மேஸ்திரி தெரு, மதுரை - 625 001. ● திருநெல்வேலி: 25, பி, இரண்டாவது மாடி, எஸ்.ஆர்.சி. காம்ப்ளெக்ஸ், எஸ்.என்.நெடுஞ்சாலை, திருநெல்வேலி ஜங்க்ஷன். ● நாகர்கோவில்: முதல் தளம், டி.எச்.என். காம்ப்ளெக்ஸ் அருகில், டிடிசி. பஸ் ஸ்டேண்டு அருகில், மீனாட்சி புரம், நாகர்கோவில் - 629 001. ● தாம்பரம்: பி.ஆர். காம்ப்ளெக்ஸ், இரண்டாவது தளம், தேஷ்னல் தியேட்டர் எதிரில், எண். 12, ராமகிருஷ்ணா சாலை, தாம்பரம், சென்னை - 600 045.

ADWAVE/AFI/5033/TAM A

# நினைவலைகள்

## 46

**THE TONGUE OF THE IDLE PERSON IS NEVER IDLE.....**

'நீர்க்குமிழி' நான் இயக்கிய முதல் திரைப்படம்.

'ரயில் சினேகம்' நான் இயக்கிய முதல் தொலைக்காட்சி சீரியல்.

What a coincidence!

இரண்டுமே 'நிலையில்லாதது' என்கிற அர்த்தத்தில் அமைக்கப்பட்ட தலைப்புகள்; short lived.

நான் இந்தத் தொலைக் காட்சி சீரியல் எடுத்துக் கொண்டிருந்தபோது பலரின் புருவங்கள் உயர்ந்தன!

ஏன் இவர் சின்னத் திரை பக்கம் சென்று விட்டார்? இனி வெள்ளித் திரைக்குத் திரும்பி வரவே மாட்டாரோ?

இப்படிப்பட்ட ஐயப்பாடுகள் பலருக்கு எழுந்ததுண்டு.

சின்னத் திரைக்காகப் பணி புரிவது ஏதோ பாவ காரியம் என்கிற மாதிரி சிலர் பேசியதுண்டு.

வெள்ளித் திரையிலே இவருக்கு வியாபார மதிப்பு போய் விட்டது போலிருக்கிறது. அது தான் சின்னத் திரை பக்கம் சாய்ந்து விட்டார்; இப்படியும் சிலர்.

இன்னும் வேறு என்னல்லாமோ சொன்னார்கள். சொல்பவர்கள் ஏதாவது சொல்லிக் கொண்டேதான் இருப்பார்கள்.

The tongue of the idle person is never idle.

ஏதோ திரைப்படத் துறையிலே மார்க்கெட் இல்லாதவர்களுக்கும், திறமை இல்லாதவர்களுக்கும்தான் இந்தச் சின்னத் திரையென்று நினைப்பவர்களின் அறியாமையைக் கண்டு நான் பரிதாபப் படுகிறேன்.

எங்குமே திறமைக்குத்தான் மதிப்பும் வெற்றியும்.

Survival of the fittest என்கிற கோட்பாடு வேறு எந்தத் துறையைக் காட்டிலும் கலைத் துறைக்குத்தான் அதிகம் பொருந்துகிறதென்று நான் நம்புகிறேன்.

To hell with my modesty :

சின்னத் திரை சீரியல்களுக்கு ஒரு மதிப்பும் மரியாதையும் கிடைத்ததற்கு எனது 'ரயில் சிநேகம்' தொடர் ஒரு முக்கிய காரணம் என்பதில் எனக்குப் பெருமையுண்டு.

'வாஸந்தி' அவர்களின் கதைத் தொகுப்புகளில் 'ஒப்பந்தம்' என்கிற கதை என்னை மிகவும் கவர்ந்தது.

சுமார் இருபத்தைந்து பக்கங்களே அடங்கிய ஒரு குறுநாவல். சற்று நீளமானதொரு சிறுகதையென்று சொன்னால் கூட பொருந்தும். காதலனால் கைவிடப்பட்டு வயிற்றிலே ஒரு சிசுவைச் சுமந்து கொண்டிருக்கும் ஒரு இள வயதுப் பெண். தற்கொலைக்குத் தயாராகிவிட்ட அவளை ஒரு ஆடவன் சந்திக்கிறான். தற்கொலை முயற்சியிலிருந்து அவளைக் காப்பாற்றுகிறான். வயிற்றிலிருக்கும் சிசுவை ஈன்றெடுக்கும்வரை அவளை ஒரு சகோதரி என்கிற நிலையில் வைத்துக் காப்பாற்றுகின்ற பொறுப்பை ஏற்றுக் கொண்டு அவளைத் தன்னுடன் அழைத்துச் செல்கிறான். அவளது ஒப்பந்தம் முடிகின்ற தருவாயில் அவளை மனத்திற்குள்ளேயே நேசிக்கத் தொடங்கியிருக்கிறான். அவனது மனிதநேயத்தையும் பெருந்தன்மையையும் கண்டு அவளும் இவனை நேசிக்கத் தொடங்கியிருக்கிறாள். இன்னொரு புது ஒப்பந்தம் செய்து கொள்வோமா என்று அவர்கள் ஒருவருக்கொருவர் கேட்டுக் கொள்வதுடன் கதை முடிகிறது.

இந்தக் கதைக்கரு ஒரு சவால் விடுகிற முடிச்சாக எனக்குப் பட்டது.

இதற்கான திரைக்கதையமைப்பு எந்தப் படைப்பாளிக்கும் ஒரு சவாலாகத்தானிருக்கும். சவாலை நான் ஏற்றுக் கொண்டேன். தொடர் வெளிவரத் தொடங்கியது. அமோகமான வரவேற்பைப் பெற்றது. முடிவில் சில வாதப்பிரதிவாதங்கள் எழும் என்று நான் எதிர்பார்த்தேன்.

எழுந்தன!

Hard core பண்பாளர்கள் ஓரிருவர் இந்தக் கதைக்குக் கண்டனம் தெரிவித்தார்கள். சகோதரியாக நினைத்து அழைத்து வந்தவளை எப்படி அவன் நேசிக்கத் தொடங்கலாம் என்றும் அவளை மனையாளாக எப்படி ஆக்கிக் கொள்ள முடியும் என்றும் ஒரு பண்பாட்டுக் கொலை நடந்து விட்டதாகவும் கூக்குரலிட்டார்கள்.

'தமிழ்ப் பண்பு' 'தமிழ்ப் பண்பு' என்று

எடுத்ததற்கெல்லாம் வீம்பு பேசும் வரட்டு வாதங்களையெல்லாம் நான் எப்பொழுதும் ஒப்புக் கொள்வதில்லை. Truth is stranger than fiction.

உண்மைகள், கற்பனையை விட விசித்திரமானவை; வினோதமானவை! உண்மை நடப்புகளோடு எந்த கற்பனாவாதியும் சரி, எப்படிப்பட்ட படைப்பாளியும் சரி, போட்டி போட இயலாது. இதுதான் உண்மை.

தன்னைக் காதலித்தவள் பின்னால் தனக்கே சிற்றன்னையாக வருகின்ற ஸ்ரீதரின் 'எதிர்பாராதது' பார்த்திருக்கிறோம் அதுதான் வாழ்க்கை.

எப்படியாவது உன்னை அடைந்தே தீருவேன் என்று ஸ்ரீதேவியிடம் சவால் விட்ட 'மூன்று முடிச்சு' ரஜினிகாந்த் முன்னால், chess காயை வேறுவிதமாக நகர்த்தி அவனுக்கே சிற்றன்னையாக வந்து நின்ற அவள் அவனுக்குக் கொடுக்கும் பேரதிர்ச்சி... அது வாழ்க்கை விசித்திரம்.

சில அடிப்படைப் பண்புகளையும் சில சீரிய சமூகக் கோட்பாடுகளையும், மீறும் கற்பனைகள் சமூகத்திற்குக் கேடுவிளைவிக்கும் என்பதை நாம் மறுப்பதற்கில்லை.

ஒரே தாயின் வயிற்றில் பிறந்த ஒரு அண்ணனும், தங்கையும் சந்தர்ப்பவசத்தால் பிரிந்து போய், பின்னால் வயது வந்தவர்களாகச் சந்திக்கும் போது, அறியாமலேயே அவர்கள் இருவரும் காதலிக்கத் தொடங்கினார்கள் என்கிற மாதிரி கற்பனைகள், ஆண் பெண் உறவுகளைக் கூறும் புனிதக் கோட்பாடுகளுக்கு எதிர்மறையாக இருப்பவை தான். அத்தகைய சம்பவங்கள் நிஜ வாழ்வில் அபூர்வமாய் நிகழக்கூடும். ஆனாலும் அப்படிப்பட்ட அதீத கற்பனைகளைத் தவிர்ப்பது ஒரு கடமை உணர்வுள்ள படைப்பாளியின் பொறுப்பு என்பதை நாம் மறுப்பதற்கில்லை.

ஆனால் இந்த (ரயில் சிநேகம்) புனிதமான மனிதநேயத்தை வெளிப்படுத்தும் ஒரு கற்பனை! இங்கே உறவுகளின் இலக்கணங்கள் எதுவும் மீறப்படவில்லை. அவன் அவனுக்கு நிஜமான சகோதரியில்லை.

'சகோதரியாக நினைப்பேன்' என்று வாய் வார்த்தையாகச் சொல்லி விட்டதனாலேயே தான் அவன் அவளை மெல்ல மெல்ல நேசிக்கத் தொடங்குவதும், அவளும் அவனை உள்ளார்த்தமாக விரும்புவதும்



• ரயில் சிநேகம்

மிகப் பெரிய கதைக் களனாக அமைகிறது. ஏறத்தாழ ஐந்து மணி நேரம் சின்னத் திரையிலே ஓடுகின்ற தொடராக அமைந்தது. பெருத்த பாராட்டுக்களைப் பெற்றது.

ஒரு பிரபல தெலுங்கு திரைப்படத் தயாரிப்பாளர் இந்த 'ரயில் சிநேகம்' தொடரை வீடியோவில் பார்த்திருக்கிறார். அவருக்கு மிகவும் பிடித்து விட்டது; மூன்று நான்கு முறை திரும்பத் திரும்ப அதைப் போட்டுப் பார்த்திருக்கிறார். அதையே ஒரு திரைப்படமாகத் தெலுங்கில் தயாரிக்க வேண்டுமென்று நினைத்து என்னிடம் தொடர்பு கொண்டார்.

எனது திரையுலக நண்பர் ஒருவரை என்னிடம் தூது அனுப்பி வைத்தார். இதை அப்படியே தெலுங்கில் எடுக்க ஆசைப்படுவதாகவும், நான் சொல்லும் எல்லா கண்டிஷன்களுக்கும் உடன்படுவதாகவும், இயக்குனராக நான் என்ன ஊதியம் கேட்டாலும் கொடுக்கத் தயாராக இருப்பதாகவும்... சொல்லி அனுப்பியிருந்தார். ஒரே ஒரு சின்ன திருத்தத்திற்கு மட்டும் நான் உடன்பட வேண்டுமென்று அவர் கேட்டுக் கொண்டார்....

"அவள் என் சகோதரி" என்று கதாநாயகன் ஒரே ஒரு இடத்திலே சொல்கின்ற அந்த வசனத்தை மட்டும் நீக்கி விட வேண்டுமென்பதுதான் அவர் சொன்ன அந்தத் திருத்தம்.

நான் யோசித்துப் பார்த்தேன். அந்த

**கே. பாலசந்தர்**



## அடுத்த இதழில்....

- **நடிகர் ஸ்டாலின் ஒரு வித்தியாசமான பேட்டி!**
- **நல்ல கணவனாக இருப்பது எப்படி?**

— உபயோகமான யோசனைகள்

'ஒப்பந்தம்' கதையில் எனக்குப் பிடித்ததே இந்த knotதான். அந்த ஒரே ஒரு வார்த்தையை எடுத்துவிட்டால் ஒரு சின்னக் குழந்தை கூட இவர்கள் இருவரும் பின்னால் காதலிக்கப் போகிறார்கள் என்று சொல்லி விடும். 'வாஸந்தி' அவர்களின் அந்த ஒரிஜினல் கதையிலிருக்கும் இந்த அம்சத்தை dilute செய்து திரைக்கதை அமைத்துத் திரைப்படம் தயாரிக்க என் மனது ஒப்பவில்லை.

நான் மறுத்து விட்டேன்.

**நா**ன் திரும்பிப் பார்க்கிறேன்.

எனது திரைப்படங்களிலே controversy என்பது புதிதல்ல.

யாருமே நினைத்துப் பார்க்க முடியாத சில சம்பவங்களை எடுத்துக் கையாள வேண்டுமென்பதில் நான் எப்பொழுதும் தீர்மானமாக இருந்திருக்கிறேன். அதுதான் எனது strong point. எனக்கென்று ஒரு conviction இருந்திருக்கிறது.

தனிப்பட்ட இந்த conviction மட்டும் இல்லையென்றால் நான் என்றோ திரையுலக வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டிருப்பேன். ஒரு 'அரங்கேற்றம்' வந்திருக்காது. ஒரு 'அபூர்வ ராகங்கள்' திரைத்துறைக்குக் கிடைத்திருக்காது. அந்தப் படம் அறிமுகப் படுத்திய அத்தனை கலைஞர்களும் கிடைத்திருக்க மாட்டார்கள்.

புதுப்புதுக் கோணங்களை வெளிச்சம் போட்டுக் காட்டுவதாலேயே அவ்வப்பொழுது சிற்சில controversyகளும் கேள்விக் கணைகளும் என்னை வந்து தாக்கும். அதற்காக நான் பயப்படுவதில்லை.

ஒரு விதவைத் தாயும் அவளது மகளும் ironical ஆக ஒரே ஆடவனுடனேயே தொடர்பு வைத்துக் கொள்வது (அவன் ஒரு தொடர்கதை) சின்ன சர்ச்சையைக் கிளப்பி விடத்தான் செய்தது.

எப்படி வேண்டுமானாலும் வாழலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிற ஒரு fast woman, ஃபடாஃபட் ஜெயலட்சுமி ஏற்ற அந்த சந்திரா என்கிற குணசித்திரத்திற்கு ஒரு shock treatment தேவைப்பட்டது.

'அபூர்வ ராகங்கள்' வெளிவந்த போது கூட இப்படித்தான் சிலர் புருவத்தை உயர்த்தினார்கள்.

தன்னை விட வயது அதிகமான பைரவியை பிரசன்னா எப்படி நேசிக்க முடியும்? தெரிந்தும் தன் மனத்தை அவளிடம் பறி கொடுத்தான் என்பதுதான் கதை...

தெரியாமல் கேட்கிறேன்.

ஏறத்தாழ சம வயதையொத்த ஒரு ஆணும் பெண்ணும் காதலிக்கத் தொடங்கும் போது "நீ பிறந்த தேதியென்ன? உன்னை விட நான் சில நாட்களாவது பெரியவன் தானே?" என்று முதலில் கேட்டுக் கொண்டா ஒரு ஆண் நேசிக்கத் தொடங்குகிறான்?

அவன் தன்னை விட ஒரு மாதம் பெரியவன் என்றோ அல்லது ஒருநாள் பெரியவள் என்றோ தெரிந்தால் தன் காதலை அவன் வாபஸ் வாங்கிக் கொள்ளவா முடியும்? Arranged திருமணங்கள் உண்டு; ஆனால் arranged காதலர்கள் உண்டாவதில்லை.

**எ**ல்லாமே negative குணசித்திரங்களாகவே வைத்து புனையப்பட்ட 'தப்புத் தாளங்கள்' திரைப்படம், தலைப்பிலிருந்து அதன் content வரை பலரது புருவத்தை உயர்த்தியது நினைவிருக்கலாம்.

தவறான negative குணசித்திரங்களுக்குள்ளேயும் மனிதாபிமானம் இருக்கத்தான் செய்கிறது என்பதை கோடிட்டுக் காட்டத்தான் அந்தக் கதை அமைக்கப்பட்டது...

காலம் சென்ற மதிப்பிற்குரிய எல்.வி. பிரசாத் அவர்கள் இந்தப் படத்தைப் பார்த்து விட்டு என்னிடம் சொன்னார். "சமுதாயத்தின் இன்னொரு பக்கத்தை அழகாகப் படமெடுத்துக் காட்டியிருக்கிறீர்கள். ஆனால் Controversy thy name is Balachander" என்றார்.

"Conviction.... thy name is Balachander" என்று சொல்லுங்கள் என்றேன்.

'ஓ'வென்று வாய் விட்டுச் சிரித்தார் பிரசாத் அவர்கள்.

(தொடரும்)

# 48 ஆண்டுகளாக

**உங்கள் பத்திரங்களைப் பாதுகாக்க**
**எங்கள் சேவல் மார்க் ஃபைல்கள்**
**பயன்பட்டு வருவதுபோல**
**உங்கள் சேமிப்புகளை பாதுகாக்க**
**எங்கள் டெபாசிட் திட்டம்...**

கணக்கிடப்படும்
வட்டி விகிதம் – ஓராண்டுக்கு

# 24%

| மாதங்கள் | ரூ.1000க்கு முதிர்வுத் தொகை | வருடாந்திர வட்டி விகிதம் |
|---|---|---|
| 12 | ரூ. 1260 | 26% |
| 24 | ரூ. 1587 | 29.35% |
| 36 | ரூ. 2000 | 33.33% |
| 48 | ரூ. 2520 | 38% |
| 60 | ரூ. 3175 | 43.5% |

குறைந்தபட்ச டெபாசிட் ரூ.*1000*




## MUTHUVEL INDUSTRIES

**Mfrs. of COCK BRAND OFFICE FILES**
**Angappa Chettiar Industrial Complex,**
20-A, Round Road, Post Box No. 32,
DINDIGUL - 624 001, TAMILNADU.
Ph: Off: (0451) 25260 & 27637, Res: 25643 & 23726
Grams: COCKFILE

*உங்கள் முன்னேற்றமே எங்கள் வளர்ச்சி*

ADWAVE/MI/5016

# முறைமாமன்

இருப்பது ஒரே ஒரு இரண்டு முறைமாமர்: 

 ஆகவே   முன்பே 

ஜெயித்து விடுவதால் அப்புறம் இன்னொரு கதை! 

மாதிரி ஒரு மெல்லிய  நாடா படம் முழுக்க வருவதாலேயே உட்கார

முடிகிறது. மற்றபடி கதையைப் புராதனமாக எங்கிருந்தோ 

கொண்டு வந்திருக்கிறார்கள்.

தன்னால் நடிக்கவும் முடியும் என்று  இப்படத்தில்

நிரூபித்திருக்கிறார். அதற்கொரு .  காட்சியில்

கன்னத்தில், யாரும் எதிர்பாரா வண்ணம் அறைகிறாரே,

கொணகொணவென்று  வழியே தமிழ் பேசும்  அவரால்

நன்றாக  வைக்க முடிகிறது.  +  சேர்ந்து

அடிக்கிற லூட்டிகள் அவ்வப்போது OK.

ஆயினும் திரைக்கதையில்  பாதிப்பு பலமாகத் தெரிகிறது.

 

பற்றியெல்லாம் பிரமாதமாகப் பேச ஒன்றுமில்லை. புதிய இயக்குநர், அடுத்த

படத்தில்  ஆக அட்வான்ஸ் 

- ஆர்.பி.ஆர்.

  

# முதல் கடிதம்

ரயில்வே ஸ்டேஷனில் இருந்து தள்ளுவண்டியில் வந்த தபால் பைகளைப் பிரித்து மேஜையில் கொட்டியதும் தனது 'பீட்' பகுதிக்கான நாற்காலியில் போய் உட்கார்ந்தான் சின்னராசு....

''அடடே.... வா.... சின்ராசு!'' சிரித்தபடி எதிரே இருந்த போஸ்ட்மேன் சூரிய மூர்த்தி தனக்கே உரிய கலகலப்பான குரலில் வரவேற்றார்.

சிக்கனமாய் சின்னராசு ஒரு புன்னகையை மட்டும் பதிலாக்கிவிட்டு எதிரே கொட்டியிருந்த கவர்களை அடுக்க ஆரம்பித்தான்.

''என்னப்பா.... டல்லா இருக்கே.... இந்த வேலை பிடிக்கலையா?'' பக்கத்து சீட்டில் இருந்த சிங்காரவேலு கேட்டார்.

''பிடிக்கலேன்னு சொல்ல முடியாது... டிகிரி வாங்கி வேற ஒரு நல்ல வேலைக்குப் போகலாம்னு ஆசை.... அது நடக்காம போயிடுச்சி ஸார்....''

சிங்காரவேலுவின் கேள்விக்குச் சின்னராசு பதில் சொன்னதும்....

''அட என்னப்பா... வேலையில் நல்ல வேலை.... கெட்ட வேலை? இதுவும் நல்ல வேலைதான் நாலு பேரோட பழக்கம் வரும். மத்தவங்க சுக துக்கங்களைத் தெரிவிக்கிற தேவதூதன் வேலைப்பா நம்ம வேலை....'' அருகில் இருந்த சந்திரசேகரன் குறுக்கிட்டார்.

சின்னராசுக்கு ஒரே வாரத்தில் வேலை பிடிபட்டு விட்டது. ஆரம்பத்தில் இருந்த சலிப்பும் கசப்பும் போய்விட்டன.

தபால்களை அடுக்குவது... மணியார்டர் பாரம்... பணம்... ரிஜிஸ்தர் தபால் பதிவு... என்று எல்லா வேலையும் சுலபமாகக் கற்றுக் கொண்டான்.

எத்தனை மனிதர்கள்? எத்தனை செய்திகள்? உலகமே புரிந்தது சின்னராசுக்கு.

கதைகள் எழுதித் தபாலில் சேர்த்துவிட்டு, பத்திரிகை ஆபிஸில் இருந்து தேர்வு பெற்றதாகத் தபால் வருகிறதா என்று ஆவலுடன் எட்டு முப்பதுக்கே போஸ்ட் ஆபீஸ் தேடிவரும் எழுத்தாளர் தேவிகாந்தன்....

காலேஜ்ல படிக்கிற மகளிடமிருந்து லெட்டர் வருகிறதா என்று பாசத்தோடு ஓடிவரும் பரமசிவம்....

இண்டர்வியூ போய்விட்டு... வேலைக்கு உத்தரவு வருமா என்று காத்திருக்கும் அன்பழகன்...

வந்து பெண் பார்த்து... ஆடச் சொல்லி பாடச் சொல்லி.... டிபன் சாப்பிட்டு விட்டு, போய் பதில் எழுதுவதாகப் பொய் சொல்லிச் சென்ற மாப்பிள்ளை வீட்டாரிடமிருந்து தபால் வராதா என போஸ்ட் ஆபீஸ் வாசலில் தவம் கிடக்கும் ரமணி....

ஓ!... இந்த 'சார் போஸ்ட்' என்பதில்தான் எத்தனை மகிழ்ச்சி... துக்கம்... எதிர்பார்ப்பு?

''சின்னராசு....!''

சைக்கிளைத் தள்ளியபடி சின்னராசு கிளம்பிய சமயத்தில் அம்மா வாசலுக்கு வந்து அழைத்தாள்.

''என்னம்மா... ஏதும் மருந்து வாங்கணுமா?''

''இல்லப்பா... நாளைக்கு லீவு போட்டுட்டுவா....''

''எதுக்கும்மா...? தங்கச்சி வீடு போகணுமா?''

''இல்லப்பா... மடப்புரம் போகணும்.''

''மடப்புரமா? எதுக்கு கோயிலுக்கா?''

''உனக்குப் பொண்ணு பார்க்கத்தான் சின்னராசு.''

அம்மா சொன்னதும்தான் ஊரில் இருந்து வந்த மாமா சொன்னது நினைவிற்கு வந்தது.

''நல்ல வசதியான இடம். பொண்ணு டீச்சர் ட்ரெயினிங் படிச்சிருக்கு. அழகா இருக்கும். ரெண்டு பேரும் வேலை பார்த்தா இந்தக் காலத்துல நல்லா இருக்கலாம்....''

மாமா சொன்னது சரிதான் என்று பட்டாலும்....

''இப்ப என்னம்மா அவசரம். தம்பி படிப்பு முடியட்டுமே...'' என்றான் சின்னராசு.

''அடபோடா... மூணே மாசம். அப்புறம் அவன் பாட்டை அவன் பார்த்துக்குவான். வேலை என்னவோ கிடைச்சாச்சு. வயசும் ஆயிட்டே போகுது... பேசாம லிவு எழுதிக் கொடுத்துட்டுவா....''

''சரிம்மா...'' என்றபடி சைக்கிளைத் தள்ளியபடி நடந்தான் சின்னராசு.

உறங்கிக் கிடந்த இளமைக் கனவுகள்



மனத்தில் விரிந்தன. சந்தோஷம வந்தது.

மறுநாள்...

உம்பளச்சேரி பஸ் பிடித்து... தலைக்காடு சாலைக் கடையில் இறங்கி... உள்ளே மடப்புரம் போய் பெண் பார்த்த போது....

'ஓ! இத்தனை வருஷம் காத்திருந்தது கூட எவ்வளவு நல்லதாய்ப் போனது?' என்று சந்தோஷப்பட்டான் சின்னராசு.

அழகான பெண். அடக்கமான கோற்றம். வசதியான வீடு....

''என்ன சின்னராசு.... பிடிச்சிருக்கா?''

தனியாய் அழைத்து அம்மா கேட்டபோது.. பார்மாலிட்டி பார்க்காது...

''நல்ல இடம்... நல்லா இருக்கு... எனக்கு ரொம்ப பிடிச்சிருக்கு... நகைநட்டுன்னு பேரம் பேசாம முடிச்சிடும்மா....'' என்றான்.

''சரிப்பா...'' என்ற பார்வதி பெண் வீட்டாரிடம்,

''என் சின்னராசுக்கு ரொம்பப் பிடிச்சுப் போச்சு....'' என்று சொன்னதும்....

''சரிங்க. ஊர்ல இருந்து என் பெரிய பையன் நாளைக்கு வர்றான். அவனையும் கலந்துகிட்டு காகிதம் எழுதறேன்....'' என்றார் பெண்ணின் அப்பா.

அடுத்த இரண்டு மூன்று நாளில் தபால்களைப் பிரித்து அடுக்கும் போதெல்லாம்... பெண் வீட்டாரிடம் இருந்து தனக்கு லெட்டர் வருகிறதா என்று ஆவலுடன் தேட ஆரம்பித்தான் சின்னராசு.

வரவில்லை. ஒரு வாரம் ஆகிவிட்டது.

''ஸார்... எனக்குத் தபால் ஏதும் இருக்கா?'' ஆர்வத்துடன் பலர் கேட்பதைப் பார்த்த சின்னராசுக்கு, தனக்கே தபால் வந்திருக்கிறதா என்று தேடும் ஆர்வம் நினைத்து மனத்திற்குள் சிரிப்பு வந்தது.

''சின்னராசு... உனக்கு ஒரு லெட்டர்...'' எதிரே லெட்டர் பிரித்து அடுக்கிக் கொண்டிருந்த சூரியமூர்த்தி சொன்னதும்....

''எங்க கொண்டா... மடப்புரத்துல இருந்தா?''

அவனையும் அறியாமல் ஆர்வத்தில் கேட்டுவிட்டான்.

''எங்களுக்கு எப்ப பார்ட்டி தரப்போறே?'' என்றபடி லெட்டரை நீட்டினார் சூரியமூர்த்தி.

ஆவலுடன் வாங்கிப் பிரித்தான் சின்னராசு. சுருக்கமாய் நாலே வரியில் இருந்தது கடிதம்....

''அன்புடையீர்!

க்ஷேமம். பெண் டீச்சர் ட்ரெயினிங் முடிச்சிருக்கிறதால்.... மாப்பிள்ளையும் ஒரு டீச்சராய் இருந்தால் தேவலாம்னு என் மகன் பிரியப்படறான். சாதாரண போஸ்ட் மேனுக்குத் தர அவனுக்கு இஷ்டமில்லை... தாங்கள் வேறு இடம் பார்க்கலாம்.....''

மௌனமாய்ப் பார்த்துவிட்டு, மடித்து, சட்டைப் பைக்குள் வைத்தான் சின்னராசு.

'சார் போஸ்ட்!' என்று அழைத்து எத்தனையோ பேருக்குத் தபால் கொடுத்த சின்னராசுக்கு வந்த முதல் கடிதம்... சோகமாய்... வருத்தமாய்... ஏமாற்றமாய் பையில் கனத்தது.

**கமலா கந்தசாமி**

## நீங்கள் கேட்டவை - தராசு

**என்னை உடன் பிறவா சகோதரராக ஏற்றுக் கொள்வீர்களா?**

● முத்ஸ், நாரேந்தல்.

*? 'பதவியில் நீடிப்பதுதான் நரசிம்மராவின் ஒரே லட்சியம்' என்று அர்ஜுன் சிங் கூறியுள்ளாரே...?*

! பாம்பின் கால் பாம்பறியும்!

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை - 9.

*? ராஜீவ் காந்தி கொலை வழக்கின் முடிவே இன்னும் தெரியவில்லை. அதற்குள் பிரபாகரனைப் பிடிக்க இருநாட்டு அரசுகளும் அவசரப்படுகின்றனவே...?*

! வழக்கு முழுமையாக விசாரிக்கப்பட வேண்டுமானால் பிரதம குற்றவாளி என்று குற்றம் சாட்டப்பட்டுள்ள பிரபாகரனை ஆஜர்படுத்தியாக வேண்டும். இதை அனுமதிக்கும் ஒப்பந்தம் இலங்கை - இந்திய அரசுகளுக்கிடையே இல்லாததால் காமன்வெல்த் ஒப்பந்தத்தைப் பயன்படுத்தி பிரபாகரனை இந்தியாவுக்குத் தருவித்து விசாரிக்க முடியுமா என்று முயன்று வருகிறார்கள்.

● வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சாவூர் - 7.

*? பதவி உயர்வில் கூட ஜாதி அடிப்படையில் ஒதுக்கீடு செய்வது சமூக நீதியாகுமா?*

! அட்மிஷனில்தான் ஒதுக்கீடு உண்டே தவிர 'பாஸ்' போடுவது ஒதுக்கீடு அடிப்படையில் அல்ல. அதே போல் பதவிகளில் ஒதுக்கீடு இருந்தாலும் பதவி உயர்வுக்கு நிச்சயம் இருக்கக் கூடாது. அப்படி அமைவது அநீதி மட்டுமல்ல அபாயகரமானதும் கூட. வேலைத் தரம் குறையும். 'தகுதி என்றால் என்ன?' என்று அடுத்த தலைமுறையினர் கேட்கும் நிலை வந்துவிடும்.

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

*? அந்நியச் செலாவணி வழக்கு அதிகாரி திடீரென்று டெல்லிக்கு மாற்றப்பட்டிருக்கிறாரே?*

! மக்களை ஏமாற்ற முடியும்; ஆனால் அதிகாரிகளை மாற்றத்தான் முடியும்!

● சு. சீதாலெட்சுமி, அணக்குடி.

*? "பாரதிதாசனின் பாண்டியன் பரிசைப் பற்றி விவாதம் வையுங்கள். நார் நாராகக் கிழிக்கிறேன்" என்று நா. காமராசன் கூறியிருக்கிறாரே?*

! இலக்கிய உலகிலும் இப்படிப் பரபரப்பாக ஏதாவது பேசிக் கொண்டிருந்தால்தான் காலம் தள்ள முடியும் போலிருக்கிறது.

● வே. சுவாமிக்குமார், தூத்துக்குடி.

*? என்னை உங்கள் உடன் பிறவா சகோதரராக ஏற்றுக் கொள்வீர்களா?*

! வை நாட்! எனக்கொன்றும் நஷ்டமில்லை. ஆனால் உங்களுக்கு லாபம் இருக்காது; பரவாயில்லையா...?

● ஜீவியன், திண்டுக்கல் - 7.

*? பெண்களுக்கு அழகு நிலையங்கள் பெருகுவது போல் ஆண்களுக்கு இல்லையே... ஆண்கள் இயற்கையிலேயே அழகுள்ளவர்கள் என்பதாலா?*

! பெண்கள் இயற்கை அழகுடன் மட்டுமே இருந்தால் ஆண்கள் ரசிப்பதில்லை என்பதால்தான் மகளிர் அழகு நிலையங்கள் பெருகுகின்றன என்று நினைக்கிறேன்.

● சிவராமசுப்பிரமணியன், தூத்துக்குடி.

*? 'திருமூர்த்தி' பட விமர்சனத்தில் தேவா இசை பற்றி எதுவும் எழுதவில்லையே?*

! காலத்தால் அழியாத பழைய பாடல்களை இன்றைய தலைமுறையினர்க்கு அறிமுகப் படுத்தும் 'உயர்ந்தபணி'யை தேவா செய்து வருகிறார். திருமூர்த்தியிலும் அவ்வண்ணமே!

● டி. ரங்கசாமி, கோவை.

*? தமிழகத்தில் கள், சாராயத்துக்குத் தடை விதித்து விட்டு விஸ்கி, பிராந்தி கடைகளை அனுமதிப்பது எந்த 'இஸத்தில்' சேர்த்தி....?*

! 'கன்துடைப்பிஸம்!' ஏழை, எளியவர்கள் மதுவில் பணம் விரயம்

* தமிழில் என்?









• தேன்மாவின் கொம்பத்து....



• 'நம்ம பையன்...'

செய்ய மாட்டார்கள் என்று பொய் சமாதானம் சொல்லிக் கொள்ளலாம். அதே சமயம் கணிசமான வருமானமும் பெறலாம்.

● **ஈ.டி. விஜயகுமார், ஈரோடு.**

*? தமிழ்த் திரையுலகில் வட இந்திய நடிகைகளின் ஆதிக்கம் அதிகரிக்கக் காரணம் என்ன?*

! காஸ்ட்யூம் செலவு கணிசமாகக் குறைகிறது என்ற காரணமாயிருக்கலாம்.

● **சி. ராஜேந்திரன், சின்னசேலம்.**

*? "ராஜீவ் என்றாலும், ராவ்ஜீ என்றாலும் ஒன்றே எனக் குமரி அனந்தன் கூறுகிறாரே?*

! 'இந்தியா இஸ் இந்திரா...' நினைவு வரவில்லை?! காங்கிரஸைப் பிடித்த நோய் விடவில்லை. அதற்கு மருந்து உட்கட்சித் தேர்தல் என்று தெரிந்தும் சாப்பிடாமலிருக்கிறார்கள்.

● **தி.க. பாலசுப்ரமண்யம், திருவண்ணாதபுரம்.**

*? சமீபத்தில் தங்கள் நெஞ்சைக் குதூகலிக்கச் செய்த நிகழ்ச்சி...?*

! 'தேன்மாவின் கொம்பத்து' என்ற மலையாளப் படத்துக்கு, சிறந்த ஒளிப்பதிவாளர் விருதை கே.வி. ஆனந்த் பெற்றார் என்ற செய்தி. பி. சி. ஸ்ரீராமின் சீடரான ஆனந்தின் முதல் படம் அது என்பது கூடுதல் பெருமை. கல்கியின் 'மாதம் ஒரு மாவட்டம்' சுற்றுப் பயணங்களின் போது உடன் வந்தவர் ஆனந்த். அப்போதே காமெரா மூலம் கதைகளைச் சொன்ன சுறுசுறுப்பான இளைஞர். 'அட, நம்ம பையன்!' என்று உரிமையோடு மகிழ்ந்து பாராட்டுகிறேன்.

● **சூரியநிலா, சேலம் - 2.** □

*? ம.தி.மு.க. ஆரம்பிக்கப்பட்ட போது 'துரோகிக் கட்சி' என்று வர்ணித்த தி.மு.க.வினரே இன்று போட்டி காங்கிரஸுடன் கூட்டணி வைத்துக் கொள்ளத் துடிக்கிறார்களே; இது எந்த வகையில் நியாயம்?*

! எஸ்.பி.க்கு ஆதரவை விலக்கிக் கொண்ட பி.எஸ்.பி., பி.ஜே.பி. ஆதரவுடன் அரசு அமைத்துக் கொண்டது எவ்வளவு நியாயமோ அவ்வளவு நியாயம்! இப்போதெல்லாம் 'கூட்டணி' என்ற சொல்லுக்குச் சந்தர்ப்பவாதம் என்பது தான் சரியான அர்த்தமாக இருக்கிறது.

● **பூங்குழலி, செங்கவல்லி.**

*? பிரதமரைப் 'புழு' என்கிறாரே சேஷன்....?*

! சேஷன் வார்த்தைகளை 'ரேஷன்' பண்ணிப் பேசக் கற்பது நல்லது. இல்லாவிட்டால் அவர் வகிக்கும் பதவிக்குத் தான் இழுக்கு. இன்னும் சிறிது காலத்தில் எப்படியும் அரசியலுக்கு வந்து விடுவாரல்லவா...? அப்போது மற்ற அரசியல்வாதிகளைப் போல் 'முத்துக்களை உதிர்த்துக் கொண்டிருந்தால் யார் தட்டிக் கேட்கப் போகிறார்கள்?

□ ரூ 25 பரிசு பெறுபவர் :
சூரியநிலா,
6, அம்மாசாமி ரோடு,
செல்வை நகர்,
சேலம் - 636 007.



• "சிறிக்கிறேன்..."



• திருமூர்த்தி



• பாம்பின் கால்....



## குகையிலிருந்து வருகிறேன்!

நான் ஐ.டி.ஐ. யில் சேர்ந்த முதல் நாள். வகுப்பறையில் ஆசிரியர் - மாணவர் அறிமுகம் நடந்தது. மாணவர்கள் தங்களுடைய பெயர்களையும் வசிக்கும் இடங்களையும் ஆசிரியருக்குத் தெரிவித்த வண்ணம் இருந்தனர். என் முறை வந்த போது, "பெயர் பிரகாஷ். குகையிலிருந்து வருகிறேன்'' என்றேன். ''அதுதான் பார்த்தாலே தெரிகிறதே!" என்று வகுப்பு ஆசிரியர் சொன்னது தான் தாமதம், வகுப்பறையே சிரிப்பினால் தூள் பறந்தது. காரணம், திருப்பதி செல்ல முடிவளர்த்து, ஏறக்குறைய சாமியாரைப் போல என் தோள் வரை முடி தொங்கியது தான்!

ஜலகண்டபுரம், டி. பிரகாஷ்.

## என்ன கண்டம்?

**ஆசிரியர் : உங்க பையன் அதிபுத்திசாலியாக வருவான் போலிருக்கே?**

**தந்தை : எப்படிங்க?**

**ஆசிரியர் : இந்தியா எந்த கண்டத்தில் இருக்குன்னு கேட்டா, மிகவும் ஆபத்தான கண்டத்தில் இருக்குன்னு சொல்றானே!**

**சந்தியூர், ஏ. கோவிந்தன்.**



## குமாரமங்கலமா, கொக்கா?

திருச்செங்கோடு அர்த்தநாரீஸ்வரர் கோயிலில் அமாவாசை விசேஷம். நானும் என் நண்பர்களும் தரிசித்துவிட்டு எங்கள் ஊருக்குச் செல்வதற்காக ஒரு பஸ்ஸில் ஏறினோம். ஒரே கூட்டம். எங்கள் ஊர் திருச்செங்கோடு– நாமக்கல் சாலையில் நான்கு கி.மீ.யிலுள்ள சிறிய ஊர். ''நாமக்கல் மட்டும் ஏறுங்க; வழியில் எங்கும் பஸ் நிற்காது!'' என்று கண்டக்டர் கூறினார். அப்பொழுது எனது நண்பன் ''குமாரமங்கலத்தில் பஸ் நிற்காதா?'' எனக் கேட்டான். ''எந்த மங்கலத்திலும் பஸ் நிற்காது!'' என்று கண்டக்டர் கூறினார். ''யோவ் குமாரமங்கலம்னா பிரதமரே நடுங்கறாரு. நீ இவ்வளவு கேவலமாப் பேசறே? உன் மேலேயும் வெட்டுத் தீர்மானம் கொண்டு வந்து உன் வேலைக்கு வேட்டு வைக்கணுமா?'' எனக் கூற பஸ்ஸே சிரிப்பால் அதிர்ந்தது. ஆம்; எங்கள் ஊர், மோகன் குமாரங்கலத்தின் ஊர்தான்!

குமாரமங்கலம், சரவணபாரதி.

## பாட்டுச் சொல்லும் சேதி!

**எங்கள் ஊரில் உள்ள இரண்டு தியேட்டர்களிலும் திரைப்படம் ஆரம்பிப்பதற்கு முன் ஸ்பீக்கரில் பாடல்களை ஒலிபரப்புகிறார்கள். உதாரணத்துக்கு, மாலைக் காட்சியின் போது ஆறு மணிக்குப் பாடல் ஒலிபரப்ப ஆரம்பிப்பார்கள். 6.30க்கு, படம் போடுகிறோம் என்பதற்கு அடையாளமாக, 'வாராய், நீ வாராய், போகுமிடம் வெகு தூரமில்லை, நீ வாராய்' என்ற பாடல் இடம் பெறும். பொது மக்களும் அதுவரை சும்மா இருந்துவிட்டு அந்தப் பாட்டைக் கேட்டவுடன் அடித்துப் பிடித்துக் கொண்டு ஓடுவதைப் பார்க்கும் பொழுது மிகவும் தமாஷாக இருக்கும்!**

**ஜலகண்டபுரம், ஆர். ரவிச்சந்திரன்.**

# சேலத்துல

## சேலமான சைலம்!

கொல்லிமலை, சேர்வராயன் மலை, போதமலை என்றெல்லாம் மலைகளால் சூழப்பட்ட பகுதியாக சேலம் இருப்பதால் 'சைலம்' என்று அழைக்கப்பட்டதாம். சைலம் என்றால் மலை என்று பொருள். அவ்வாறு சைலம் என்று அழைக்கப்பட்ட இடமே நாளடைவில் சேலம் என்று மருவியதாகக் கூறப்படுகிறது.

இராசிபுரம், இரா. சம்பத் குமார்.



## கோழிகளுக்கு ஒரு ம்யூசிக் சானல்!

நாமக்கல்லைச் சுற்றியிருக்கும் கோழிப் பண்ணைகளில் கோழிகள் கூட திரைப்படப் பாடல்களை டேப்ரிகார்டர் மூலம் கேட்டு மகிழும். கேட்க ஆச்சர்யமாக உள்ளதா? பண்ணைகளில் உள்ள கோழிகள் சிறிய வயது முதலே

# சிரிப்பு!

பண்ணைகளில் வளர்க்கப்படுதால் அவற்றுக்கு மோட்டார் வாகன சத்தமோ புதிய நபர்களின் வருகையோ அலர்ஜியாக இருக்கும். அப்போது பண்ணைக்குள் எல்லாக் கோழிகளும் ஒன்றாகவே சேர்ந்து பறக்கும். அவ்வாறு பறப்பதால் அதற்கு சக்தி இழப்பு ஏற்பட்டு, பண்ணையாளர்களுக்கு முட்டை உற்பத்தி பாதிக்கப்படலாம். எனவே, கோழிகள் தங்கள் பய உணர்வைப் போக்கிக் கொள்ள ஒவ்வொரு பண்ணையிலும் ம்யூசிக் சானல் மாதிரி இடைவெளி இல்லாமல் திரைப்படப் பாடல்கள் ஒலிபரப்பாகிக் கொண்டேயிருப்பதைக் காணலாம்.

நாமக்கல், எம். அமுதா.

## வியாபார ரகசியம்!

சேலம் குகை பகுதிக்கு வந்தால் மட்டும், 20 ரூபாய் பூண்டு 40 ஆகும், 10 ரூபாய் பொருள் 30 ரூபாய் ஆகும். என்ன காரணம்? ஒரு பெண்மணியிடம் இதன் ரகசியம் கேட்டேன். அந்தப் பெண்மணி என்னைத் தனியாக அழைத்துச் சென்று, ''இந்த ஏரியா பணக்கார ஏரியா. கம்மி விலை சொன்னா, சரக்கு சரியில்லையோன்னு வேண்டாம்னு சொல்லிடுவாங்க. அது மட்டுமல்ல; பேரம் பேசியும் வாங்குவாங்க. அப்படி 10 ரூபாய் குறைச்சி வாங்கினா சாமர்த்தியம்னு நினைக்கிறதோட, அடுத்த முறை வரும் போதும் 'அன்னிக்கு கூட பத்து ரூபாய் குறைச்சி போட்டான்'னு நிறைய வாங்கு வாங்க. தயவு செய்து இதை இங்கிருக்கற வங்ககிட்ட சொல்லிடாதே!'' என்றார். அந்த அம்மணியின் வியாபாரத் திறமையைக் கண்டு வியந்தேன்!

சேலம் - 6, ந. கீதாஞ்சலி.



## அப்பாவைக் கேட்கணும்!

சேலம் செல்லும் பேருந்து. ஒரு பையனுக்கு முழு டிக்கெட் வாங்கச் சொன்னார் கண்டக்டர். பையனின் அப்பாவோ, 'அரை டிக்கெட்தான் வாங்குவேன்' என்று அடம்பிடித்தார். 'சரி! பையனுக்கு என்ன வயசு?'– கேட்டார் கண்டக்டர். 'ஏழோ, எட்டோ இருக்கும்!' - பையனின் தந்தை. நம்புகிற மாதிரி இல்லை. பையனுக்கு முழு டிக்கெட் வாங்க வேண்டிய வயசாகிவிட்டது போலிருந்தது. கண்டக்டர் பையனிடம் கேட்டார் : ''எந்த கிளாஸ்டா படிக்கிறே?'' பையன் சொன்னான் : ''அப்பாவைத்தான் கேட்கணும்!'' கண்டக்டர் உட்பட எல்லோரும் சிரித்து விட்டோம்!

கெங்கவல்லி, கி. முருகவேள்.

'சேலத்துச் சிரிப்பு'
முற்றுப் பெறுகிறது.
சிறந்த சிரிப்புக்கான
சிறப்புப் பரிசு ரூ.100
பெறுபவர் குமாரமங்கலம்,
சரவணபாரதி.

# வட்டமேஜை

1. பம்பாய், பழனி.
2. மதுரை - 9, இராஜேஸ்வரி பால்ராஜ்.
3. உறையூர், சபிதாநேசன்.
4. நாட்டரசன்கோட்டை, ஜோ. ஜெயக்குமார்.
5. திண்டுக்கல், ஜனனி பார்கவி.
6. அரக்கோணம், எல். கோபாலகிருஷ்ணன்.
7. உதகமண்டலம், மு. சேக்.
8. கருமத்தம்பட்டி, அ. இராஜப்பன்.
9. சென்னை - 91, வே.ந. கோபால்.

## வேண்டாம் சிவநேசன், ப்ளீஸ்...

1. 'சன் மியூசிக் சானலில் ஆபாசப் பாடல்கள்' பற்றிய கேள்விக்கு, கலாநிதி மாறன் சொன்ன பதில் சொதப்பல்.

2. கலாநிதி மாறன் சொல்வது சரிதான். ஆனால் சிறந்த நிகழ்ச்சிகளை முதலில் தயாரித்து வைத்துக் கொண்டு, பின் ஒளிபரப்பைத் தொடங்கி இருக்கலாமே?

3. இப்பொழுதுதான், ஆபாசம், பேஷனாகி விட்டதே அதுக்குப் போய் ஒரு பேட்டியா?

4. ''என் உடன்பிறவா சகோதரி'' என்ற தலைப்பில் வெளியிட்டிருந்த செய்தியில் உண்மையான பாசத்தைக் காண முடிந்தது!

5. ஒன்டுக் குடித்தனத்தில் ஒரு எம்.எல்.ஏ. என்ற கட்டுரை வியப்பில் ஆழ்த்தியது. எனினும் பால் தாக்கரேயை தெய்வம் என்றும், அவரின் தீட்சண்யம் சாமானியர்களுக்குப் புலப்படாது என்றும் நந்த காக்கர் கூறியிருப்பது அவர் தமிழ் நாட்டு அமைச்சரவையில் இடம் பெற்றிருக்க வேண்டியவர் என்பதைக் காட்டுகிறது!

6. தஞ்சை மாவட்ட (16 ஆம் பக்கம்) சாமியார் ஜோக், விகடனில் ஸ்டார் ஜோக்காக வந்து விட்டது! கடவுள் ஜோக் (22 ஆம் பக்கம்) போன வருடம் சாவியில் வெளிவந்தது! உடன் பிறவா சகோதரர்களே, இப்படி ஆசிரியரை ஏமாற்றி, வாசகரை சோதிக்கலாமோ?

7. 4.6.95 கல்கியில் கே.பி.யின் நினைவலைகள் படித்தேன். ராஜாஜி ''சம்பூர்ண ராமாயணம்'' படம் பார்த்து, பரதனாக நடித்த சிவாஜியையும் பாராட்டிப் பேசியுள்ளார் என்பதை அவர் குறிப்பிட்டிருக்கலாம்.

8. 'நமக்குப் பிரதமர் பதவி கிடைக்காமலே போய்விடுமோ' என்ற அர்ஜுனின் 'உடைந்த' மனமும், 'நம்மை முழுதாக ஐந்து வருட காலம் ஆள விடவே மாட்டார்களோ' என்ற ராவின் உடைந்த உள்ளமும்தான், ''காங்கிரஸ்'' என்ற பாரம்பர்ய மிக்க கட்சி, 'உடைந்து - உருக்குலைந்து' போகும் காட்சிப் பொருளாகக் காரணம். அதன் 'பக்க-விளைவுகள்' படுபயங்கரமாயிருக்கும் என்ற கருத்தினைக் கூறும் தலையங்கம் பாராட்டுக்குரியதாகும்.

9. தலையங்கம் நடுநிலையோடும், பிரத்யட்ச உணர்வோடும் எழுதப்பட்டிருந்தது. அர்ஜுன் சிங் - சோனியா = 0.சோனியா. அந்நியநாட்டவர் என்பதால் ஒரு political liability ஆகவும் கருதப்படலாம். எனவே சோனியா காங்கிரஸ் சோனியாகப் போனாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அரசியல் விஷயத்தில் ராவ் அப்படி இப்படி இருந்தாலும் உலகப் பொருளாதார நீரோட்டத்துடன் நம் நாட்டை இணைக்கும் கொள்கையில் பிடிப்புள்ளவராகவும், விடாப் பிடியுடனும் இருக்கிறாரே.

### ரூ. 20/- பரிசு பெறும் கடிதம்!

◆ 'சீனியர்' சிறுகதையின் நாயகன் மிஸ்டர் சிவநேசனுக்கு, வீடு பூரா பற்றாக்குறையே தலை விரித்தாடும் போது உங்களுக்கு மட்டும் ஏன் இந்த நேர்மை, நியாயம், சீனியர் வழியெல்லாம்? பிஸ்கட் பாக்கெட் கையில் இருந்தால்தான் நந்து கால் கட்டிப் பார்க்கும் சுகமும், இரட்டை வடச் சங்கிலியை மீட்டால்தான் மனைவியின் பார்வையில் காதல் கலந்த கரிசனமும் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது. இந்த நிலையில் உங்களுக்கு ஏன் முன்னோர் வழி எல்லாம்? காலத்திற்குத் தகுந்த மாதிரி மாறுங்க சிவநேசன்....' — இப்படி முரஹரியே வந்து கெஞ்சினாலும் நீங்க மாறிடாதீங்க சிவநேசன்!

இலால்குடி, ஆங்கரை பைரவி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.



# ஸ்ரீ கந்தசுவாமி
## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990
பதிவு அலுவலகம்: 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2. ph: 848917
கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-600 015. போன்: 459569


கந்தகோட்டம்
ஸ்ரீமுத்துக்குமாரசுவாமி

### பிக்சட் டிபாசிட்

| 46நாள் | 3மாதம் | 6மாதம் | ஆண்டு | 2ஆண்டு | 3ஆண்டு | 4ஆண்டு | 5ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%**

5 வருடங்கள்
**ரூ.50,000/-**
அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 25,000 | 60 மாதம் | ரூ. 70,000 |

### சொத்துக்கள் மீது கடன்

- வீடு / ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்.
- மாத வட்டி ரூ.1.85 மட்டுமே
- விரைந்த சேவை
- சென்னை மாநகராட்சி எல்லைக்குள் இருக்க வேண்டும்.



### நகைக்கடன்

- குறைந்த வட்டிக்கு கிடைக்கும்
- 10 கிராமுக்கு ரூ.3000 வழங்கப்படும்.
- R.D. கட்டத் தேவையில்லை
- எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை



**பாதுகாப்புப் பெட்டக வசதியும் உண்டு.**

# பென்ஷனர் நலத்திட்டம்

**20% P.a** ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.



சேர்மன்:
**P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
கந்தகோட்டம்,
சென்னை-600 003.
ஆலோசகர்
பார்க் டவுன் பெனிபிட்
பண்டு லிட்.

இயக்குநர்கள் குழு
R.விவேகானந்தன் B.Com.,
(Chairman : Park Town Benefit Fund Ltd.)
A.சுப்பிரமணியன்
V.சண்முகவடிவு B.A.,
V.விஜயகோபால் B.Com., D.C.P.
M.ராஜேந்திரன்
P.ஏகாம்பரம்

பங்குதாரர்களுக்கு மட்டும்

H.O. Friday Holiday (It is a P.B. Group Concern) B.O. Tuesday Holiday

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka